# ஜனநாயகம்

# உண்மையும் போலியும்

மகாத்மா காந்தி



காந்திய இலக்கியச் சங்கம்

தமிழ்நாடு காந்தி நினைவு நிதி மதுரை - 20

# ஜனநாயகம்
# உண்மையும் போலியும்

**மகாத்மா காந்தி**

**காந்திய இலக்கியச் சங்கம்**
காந்தி நினைவு நிதி, மதுரை-625 020.

காந்திய இலக்கிய சங்க வெளியீட்டு எண் : 60

நூலின் பெயர் : ஜனநாயகம் -உண்மையும் போ
ஆசிரியர் : மகாத்மா காந்தி
பொருள் : அரசியல்
வெளியிட்டோர் : காந்திய இலக்கியச் சங்கம்
மதுரை - 625 020.
அச்சிட்டோர் : மாடர்ன் ஆப்செட் பிரிண்டர்ஸ்
சிவகாசி
பதிப்பு : 6 -ம் பதிப்பு - ஜனவரி - 2014
பிரதிகள் : 3000
**விலை : ரூ. 20.00**



Name of the Book : Jananayagam - Unmaiyum Poliyum
Author : Mahatma Gandhi
Subject : Political
Publisher : Gandhian Literature Society
Madurai - 625 020.
Printer : Modern Offset Printers
Sivakasi - 626 123.
Edition : 6th Edition January - 2014
Copies : 3000
**PRICE : Rs. 20.00**

# பதிப்புரை

இப்போது நம் நாட்டிலும், பிரிட்டன், பிரான்ஸ் முதலிய ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் ஜனநாயக ஆட்சி நடப்பதாக சொல்லப் படுகிறது. ருஷ்யாவிலும் ஐரோப்பிய கீழை நாடுகளிலும் கூட நடப்பது ஜன நாயக ஆட்சிக்கு மறு பெயரான மக்களாட்சியே என்கிறார்கள். ஆனால் காந்தி யடிகள் ஜனநாயகத்திற்கு அளிக்கும் விளக்கத்தின்படி பார்க்கையில் இன்று உலகில் எங்குமே உண்மையான ஜனநாயகம் இயங்கவில்லை என்று தெரிகிறது. அவர்கள் ஜனநாயகத்திற்கு இருக்க வேண்டுமென்று கூறும் இலக்கணத்தையும், அவ்விலக்கணங்கள் எங்கு, எவ்வாறு திரிக்கவும் மாற்றவும் பட்டு வருகின்றன என்பதையும் கூறும் அன்னாரது உரைகளையும் கட்டுரைகளையும், அன்பர்களின் ஐயங்களுக்கு அவ்வப்போது அவர்கள் அளித்த சமாதானங்களையும் தாங்கியதால் நமது காந்திய இலக்கியச்சங்க வெளியீட்டு வரிசையில் 60-வதான இதை, ஜனநாயக தத்துவமே பெருங் குழப்பத்தில் சிக்கியுள்ள இப்போது எல்லோருக்கும் மிகவும் பயன்படும் என்ற எண்ணத்தில் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.

இது நவஜீவன் பிரசுராலயத்தின் ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பே. அவர்களுக்கு எமது நன்றி.

மதுரை

28-3-99

**காந்திய இலக்கியச் சங்கம்**

# பொருளடக்கம்

# ஜனநாயகம் உண்மையும் போலியும்

## 1. ஜனநாயகத்தின் சாரம்

அனைவரின் நலனுக்காகவும் மக்களில் பல்வேறு பகுதியினரின் உடல் பலம், பொருள் வசதிகள், ஆன்மீக பலம் ஆகியவை அனைத்தையும் திரட்டிப் பயன்படுத்த உதவும் கலையும் விஞ்ஞானமுமே, சுருங்கக்கூறின், ஜனநாயகம் ஆதல் வேண்டும். - ஹரிஜன், 27.5.1939, பக்கம் 143

உதட்டினால் மட்டும் சத்தியத்திற்கும் அஹிம்சைக்கும் வணக்கம் செலுத்தினால் நம்மால் சுதந்திரமென்ற ராஜ்யத்தில் புக இயலாது.

- யங் இந்தியா, 16.2.1922, பக்கம் 103

உண்மையும் நாட்டுப்பற்றும் கொண்ட பெரும்பாலோராயுள்ள மக்களுக்கு சொந்த லாபம் உள்ளிட்ட எல்லாவற்றையும் விட நம் நாட்டின் நலனே உயர்ந்ததாய், முக்கியமானதாய் இருக்குமிடத்தில் தான் சுயராஜ்யத்தை நீடித்து நடத்த முடியும். சுயராஜ்யம் என்றால் பலர் சேர்ந்து ஆளுவது. அந்தப்பலர் நடத்தை கெட்டவர்களாயும் சுயநலமிகளாயும் இருந்தால் அவர்கள் நடத்தும் ஆட்சி அராஜகமாய் அன்றி வேறு எதுவாகவும் இராது. - யங் இந்தியா, 28.7.1921, பக்கம் 238

நம்மை நாமே ஆளக் கற்றுக்கொண்டு விட்ட இடத்தில் சுயராஜ்யம் இருக்கும். எனவே அது நம் உள்ளங்கையில் இருப்பது.

- "இந்திய சுயராஜ்யம்", 1958, பக்கம் 65

தனி மனிதனின் ஆன்ம சக்தியே மிகவும் முக்கியம். அரசியல் உருவம் என்பது அந்த ஆன்மசக்தி தாங்கி வளையவரும் உருவமே. தனி மனிதனின் ஆன்மசக்தி வேறு, அரசாங்கத்தின் அரசியல் உருவம் வேறு என்று நான் நினைக்கவில்லை. இதனால், பார்க்கப் போனால் ஒவ்வொரு மக்கள் இனத்திற்கும், சமூகத்திற்கும் அவர்களின் தகுதிக்கேற்ப அரசாங்கம் அமையும் என்று நம்புகிறேன். இதையே வேறு வார்த்தைகளில் சொன்னால், சுய ஆட்சி, சுயமுயற்சி ஒன்றினால் தான் வரக்கூடும். - யங் இந்தியா, 17.9.1925, பக்கம் 321-22

மக்களே வேர்கள்; அரசாங்கம் பழமாகும். வேர்கள் இனித்தால் பழங்களும் இனிக்கவே செய்யும். - யங் இந்தியா, 2.2.1928, பக்கம் 38

குறிப்பிட்ட ஒரு சமயத்தில் நாம் எந்த அளவுக்கு ஆன்மீக சுதந்திரத்தை வளர்த்துக்கொண்டிருக்கிறோமோ அதே அளவுக்குத் தான் நமக்கு புறச்சுதந்திரமும் கிடைக்கும். நாம் பெறும் புறச் சுதந்திரம் நம் அகச்சுதந்திரத்தின் எடைக்கு எடை சரியாயிருக்கும். - யங் இந்தியா, 1.11.1928, பக்கம் 363

சுயராஜ்யத்தை நோக்கி எடுத்து வைக்கவேண்டிய முதல் அடி நாம் ஒவ்வொருவரும் எடுத்து வைக்க வேண்டியதாகும். பிற விஷயங்களுக்குப் போலவே இதற்கும், 'அணுவில் போல்தான் அண்டத்திலும்' என்ற பேருண்மை பொருந்தும்.

- "மகாத்மா காந்தியின் பேச்சுக்களும் எழுத்துக்களும்". (ஆங்கிலம்)

G.A. நடேசன், 4-ம் பதிப்பு, பக்கம் 409

ஒரு நாட்டு மக்களின் சுயராஜ்யம் என்பது அவர்களில் ஒவ்வொருவரும் எய்தியுள்ள சுய ஆட்சியின் (தம்மை அடக்கியாளுதலின்) கூட்டுத் தொகையே.

- ஹரிஜன், 25.3.1939, பக்கம் 64

சுயராஜ்யம் என்பதற்கு நான் கொள்ளும் பொருள் இந்நாட்டில் பிறந்தும், இங்கே குடியேறியும் உள்ள வயது வந்த ஆடவரும் பெண்டிரும் தம் உடல் உழைப்பினால் அரசாங்கத்திற்கு உதவியும், தம் பெயர்களை வாக்காளர் பட்டியலில் பதிவு செய்து கொள்வதில் அக்கறை கொண்டும் இருப்பவர்களில் பெரும்பாலோரின் சம்மதத்தின் மூலம் அமைக்கப்படுவது என்பது. இந்த நோக்கம் சுயராஜ்யம், அதிகாரத்தை ஒரு சிலர் கைப்பற்றிக் கொள்வதனால் வந்து விடாது, அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படுகையில் அதை எதிர்த்து நிற்பதற்கு வேண்டிய தகுதியை எல்லாரும் பெறுவதனாலேயே வரும் என்பதை நிரூபிப்பதன் மூலம் எய்தலாம் என்று எதிர்பார்க்கிறேன். இதையே வேறு வார்த்தைகளில் சொன்னால் ஆட்சியை ஒழுங்குபடுத்தவும், அடக்கிக்கொண்டு போகவும் தமக்குள்ள சக்தியை உணருமாறு பொது மக்களுக்கு போதிப்பதனாலேயே சுயராஜ்யம் பெறப்படவேண்டும்.

- யங் இந்தியா, 29.1.1925, பக்கம் 40-41

சுயராஜ்யத்தினால் நாம் நாகரிகம் அடையுமாறும், நாம் தூய்மையுற்று நம் நாகரிகத்தை நிலைக்கச் செய்யவும் முடியாதென்றால் அந்த சுயராஜ்யம் சல்லிக்காசு பெறாது. நமது நாகரிகத்தின் சாரமே பொது வாழ்விலும், சொந்த வாழ்க்கையிலும், எல்லா விவகாரங்களிலுமே நன்னடத்தைக்கு தலையாய இடம் அளிப்பதுதான்.

- யங் இந்தியா, 23.1.1930, பக்கம் 26

நான் கனவு காணும் சுயராஜ்யம் ஏழை மனிதனின் சுயராஜ்யமே. மன்னர்களும் பணம் படைத்தவர்களும் அனுபவிக்கும் வாழ்க்கை வசதிகள் அனைத்தையும் அவர்களோடு சேர்ந்து நீங்களும் அனுபவிக்க வேண்டும். ஆனால் இதற்கு அவர்களுடையதைப் போன்ற அரண்மனைகள் உங்களுக்கும் இருக்க வேண்டுமென்று அர்த்தமில்லை. வாழ்க்கையில் இன்பம் பெறுவதற்கு அவை அவசியமல்ல. நீங்களும் சரி, நானும் சரி அவைகளில் புகுந்தால் வழி தெரியாது தான் திகைப்போம். ஆனால் ஒரு பணக்காரன் அனுபவிக்கும் சாதாரணமான

வாழ்க்கைத் தேவைகளெல்லாம் உங்களுக்கும் கிடைத்தாக வேண்டும். சுயராஜ்யத்தில் இவை உங்களுக்குக் கிடைக்குமென்ற உறுதி அளிக்கப்படும் வரையில் அது பூரண சுயராஜ்யம் ஆகாது என்பதில் எனக்குச்சிறிதும் ஐயமில்லை.

- யங் இந்தியா, 26.3.1931, பக்கம் 46-47

சுய ஆட்சி, என்றால் அரசாங்கத்தினிடமிருந்து - அது அந்நியருடையதோ நம்முடையதோ - அதன் கட்டு திட்டங்களிலிருந்து விடுபடுவதற்குச் செய்யப்படும் தொடர்ந்த முயற்சி ஆகும். சுயராஜ்ய அரசாங்கத்தின் கீழ் வாழும் மக்கள் தம் வாழ்க்கையின் ஒவ்வொரு சிறிய விஷயத்திற்கும் அரசாங்கத்தின் தயவை நாடுவதாய் இருந்தால் அந்த சுயராஜ்ய ஆட்சி மிகவும் மோசமானதாய்த்தானிருக்கும். - யங் இந்தியா, 6.8.1925, பக்கம் 276

சுயஆட்சி எதிர்ப்படும் மிகவும் கடுமையான சிரமங்களையும் சமாளித்து நின்று போராடுவதற்கு நமக்குள்ள சக்தியையே முழுதும் பொறுத்திருக்கிறது. உண்மையில் அதைப்பெறுவதற்கும், பெற்ற பிறகு அதைப்பாதுகாப்பதற்கும் தொடர்ந்து செய்யப்படும் இந்த முயற்சி தேவையில்லையானால் அது சுயாட்சி என்ற பெயருக்கே தகுதி அற்றதாகிவிடும். இதனாலேயே நான் சொல்லாலும் செயலாலும் அரசியல் சுதந்திரம் அல்லது பெருந்தொகையினரான ஆடவரும் பெண்டிரும் அனுபவிக்கும் சுயஆட்சி தனி மனிதனது சுயஆட்சியை விட உயர்ந்ததல்ல; எனவே தனி மனிதன் சுயஆட்சி அல்லது தன்னாட்சி பெறுதற்கு எந்த வழியைப் பின்பற்ற வேண்டுமோ அதன் மூலமே இதையும் பெற்றாக வேண்டும் என்று காட்டமுயன்று வந்திருக்கிறேன்.

- யங் இந்தியா, 1.12.1927, பக்கம்402-3

மனிதன் அமைக்கும் எந்த நிறுவனத்திலும் அதற்குரிய ஆபத்துக்கள் இருக்கத்தான் செய்யும். ஒரு நிறுவனம் எவ்வளவு பெரியதாயிருக்கிறதோ அவ்வளவுக்கு அதில் ஆபத்துக்களுக்கும் அதிக இடமிருக்கும். ஜனநாயகம் என்பது ஒரு பெரிய நிறுவனமாகையால் அதில் பிழைகள் நிகழுவதற்கு அதிக இடம் உண்டு. எனவே இதற்கு பரிகாரம் ஜனநாயகத்தையே தவிர்ப்பதல்ல, அதில் தவறுகள் நிகழுவதை கூடிய வரையில் குறைக்கப் பார்ப்பதேயாகும்.

- ஹரிஜன், 7.5.1931, பக்கம் 99

உண்மையான ஜனநாயகத்திற்கும் தம்மை மக்களின் பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொள்ளும் ஒரு சிலர் அம்மக்களின் மனப் போக்கிற்கும் நம்பிக்கைக்கும் ஆசைகளுக்கும் பிரதிநிதித்துவம் வகிப்பதற்கும் முரண் எதுவும் இல்லை. பலவந்தமான முறைகளினால் ஜனநாயகத்தை உருவாக்க முடியாது என்பது என் நம்பிக்கை. ஜனநாயக தத்துவத்தை புறத்தேயிருந்து கொணர்ந்து

சமத்துவதற்கில்லை; அது அகத்திலிருந்தே தோன்ற வேண்டும்.

- "தி பாம்பே கிரானிகிள்" (ஆங்கிலம்) 18.9.1934

மக்களில் மிக மிக ஏழைகளுடன் முழுதும் ஒன்றுவதும், அவர்களுடையதைவிட சிறிதும் உயர்ந்ததல்லாத வாழ்க்கை நடத்துவதில் தீவிர விருப்பமும், அவர்களின் தரத்தை எட்டுவதன் அவசியத்தை ஓயாது உணர்ந்தும், இயன்றளவு முயன்றும் வருதலும் ஒருவனுக்கு தன்னை ஒரு ஜனநாயகவாதி என்று சொல்லிக்கொள்ள உரிமையளிக்குமானால் நான் என்னை ஜனநாயகவாதி என்பேன். - "தி பாம்பே கிரானிகிள்" (ஆங்கிலம்), 18.9.1934

மக்கள் கைக்கு அரசியல் அதிகாரம் வரும்போது அவர்களின் சுதந்திரத்தில் அரசாங்கத்தின் தலையீடு கூடியவரையில் குறையும். இதையே வேறு வகையில் சொன்னால் அரசாங்கத்தின் தலையீடு அதிகமில்லாமல் தன் காரியங்களை சுமூகமாகவும் சிறப்பாகவும் நடத்திக் கொண்டு போகும் நாடு உண்மையில் ஜனநாயக நாடாகும். இவ்வாறு இல்லாதபோது ஜனநாயகம் நடப்பதாய்ச் சொல்வது பெயரளவில்தான் அவ்வாறு இருக்கும்.

- ஹரிஜன், 11.1.1936, பக்கம் 380

ஜனநாயகத்தின் சாரமே நாட்டில் வாழும் பல்வேறு இனத்தாருக்கும் சாதியாருக்கும் ஒவ்வொரு மனிதனும் பிரதிநிதியாயிருப்பதில்தான் இருக்கிறது. சிறப்பான இனங்களுக்கும் சாதிகளுக்கும் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்க அதில் இடம் இல்லாதிருக்கக் கூடாது; இடமிருக்கவே வேண்டும். ஆனால் அத்தகைய பிரதிநிதித்துவமே அது ஜனநாயகம் என்பதற்கு அத்தாட்சி ஆகாது; குறைபாடுள்ளது என்பதற்கே இது அறிகுறி. - ஹரிஜன், 22.4.1939, பக்கம் 99

உண்மையான ஜனநாயகம் அல்லது பொது மக்களின் சுயராஜ்யம் பொய்யானாலும் பலவந்தமான முறைகளினால் ஒருபொழுதும் அமையாது. இதற்கான எளிய காரணம், அவைகளை உபயோகித்தலென்பதற்கு எதிரிகளையெல்லாம் அடக்கி ஒழித்தல் யென்று அர்த்தமாவதுதான். அவ்வாறு செய்கையில் தனி மனிதன் சுதந்திரத்தைக் காக்கவே முடியாது. கலப்பில்லாத அஹிம்சை ஆட்சி செலுத்தும்போதுதான் தனி மனிதனின் சுதந்திரம் பாதுகாக்கப்படும். - ஹரிஜன், 27.5.1939, பக்கம் 143

20 பேர் மத்திய அரசாங்கத்தில் அமர்ந்து ஆட்சி செய்வதனால் உண்மையான ஜனநாயகத்தை நடத்த முடியாது. கிராமந்தோறும் வாழும் மக்கள் தான் அதைக் கீழேயிருந்து நடத்திச் செல்லவேண்டும்.

- ஹரிஜன், 18.1.1948, பக்கம் 519

போலீசு, ராணுவம் ஆகியவற்றின் சப்பைக்கட்டினால் நடக்கும் ஜனநாயகம், அதனாலேயே தகர்ந்து போகும். நம்பிக்கை உள்ள இடத்தில் தான் அது நிலைக்கும்.

- "டில்லி டயரி" (ஆங்கிலம்), பக்கம் 136, பதிப்பு 1948

பெருந்தொகையினராய் பிரதிநிதிகள் இருப்பது நடவடிக்கைகளைச் செவ்வனே நடத்துவதற்கு உதவியாயிருக்குமென்றோ, ஜனநாயக தத்துவத்தைப் பாதுகாக்கும் என்றோ நம்புவது முற்றிலும் தவறு என்பது என் எண்ணம். ஜனநாயகத்தை மக்கள் நலனில் அக்கறையும், தாராள மனமும், உண்மையும் உள்ளவர்களான 1500 பிரதிநிதிகளினால், பொறுப்பில்லாமல் எப்படியோ தேர்ந்தெடுக்கப்பட்ட 6000 பிரதிநிதிகளை விட சிறப்பாகப் பாதுகாக்க முடியும். ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்கு மக்கள் தம் சுதந்திரத்தில் மிகுந்த அக்கறையும், சுயமரியாதையும், தாம் எல்லோரும் ஒன்று என்ற உணர்வும் உள்ளவர்களாயிருப்பதோடு, நல்லவர்களையும், உண்மையானவர்களையுமே தம் பிரதிநிதிகளாய்த் தேர்ந்தெடுப்பதில் உறுதியும் கொண்டிருக்க வேண்டும்.

- "சத்திய சோதனை" (ஆங்கிலம்), பக்கம் 369, பதிப்பு 1958

வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை அளிக்கும் விஷயத்தில் நான் தீர்மானமாய் இருப்பவன். வயது வந்தவர்களுக்கு ஓட்டுரிமை அளித்தல் பல காரணங்களினால் அவசியமாயிருக்கிறது. என்னைப் பற்றிய வரையில் அந்தப் பல காரணங்களுள் முடிவான ஒன்று அந்த ஏற்பாடு முஸல்மான்கள் மட்டுமன்றி, தீண்டப்படாதோர் எனப்படுவோர், கிறிஸ்துவர், தொழிலாளர், எல்லாவகை சாதியார், இனத்தார் ஆகியோரின் நியாயமான ஆசைகளையும் திருப்தி செய்ய உதவுவதேயாகும். பணமுள்ள ஒருவனுக்கு ஓட்டு உண்டு, ஆனால் சீரிய நடத்தையிருந்தும் பணமோ படிப்போ இல்லாத இன்னொருவனுக்கு இல்லை என்பதையும், ஒருவன் ஏழை என்பதனால் அவன் உண்மையாகவும் நெற்றி வியர்வை நிலத்தில் விழ அல்லும் பகலும் ஓயாது உண்மையாக உழைத்தும் அவனுக்கு ஓட்டில்லை என்பதை என்னால் தாளவே முடியாது.

- யங் இந்தியா, 8.10.1931, பக்கம் 297

## 2. ஜனநாயகமும் அஹிம்சையும்

ஈர்ப்புச்சக்தி பூமியை இழுத்துப்பிடித்து நிறுத்தியிருப்பதைப் போல சமுதாயம் முழுவதையும் அஹிம்சை கட்டிப்பிணித்து வைத்திருக்கிறது. ஆனால் ஈர்ப்புச்சக்தி சித்தாந்தம் கண்டுபிடிக்கப்பட்ட போது, அதிலிருந்து நம் முன்னோருக்கு சிறிதும் தெரிந்திராத விளைவுகள் தோன்றின. அதே போல சமுதாயம் வேண்டுமென்றே அஹிம்சை முறையில் அமைக்கப்படும் போது அதன் அமைப்பும் உருவ

மும், முக்கியமான அம்சங்களில், இன்று இருப்பதிலிருந்து வேறாக இருக்கும். ஆனால் முழுக்க முழுக்க அஹிம்சையின் அடிப்படையில் அமைந்த அரசாங்கம் எப்படியிருக்கும் என்று என்னால் இப்பொழுதே சொல்ல முடியவில்லை.

இன்று நடந்து கொண்டிருப்பது அஹிம்சா சித்தாந்தத்தை அசட்டை செய்துவிட்டு, ஹிம்சையை சாசுவதமான சித்தாந்தமாய்க் கருதி அதை அஹிம்சையின் சிம்மாசனத்தில் அமர்த்துவதாகும். இதனால் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பிரான்சிலும் இயங்கி வருபவை பெயரளவுக்கே ஜனநாயகங்களாயிருக்கின்றன. காரணம், அவை நாஜிஸ ஜெர்மனி, பாஸிஸ்டு இத்தாலி ஆகியவற்றையும் சோவியத் ரஷ்யாவையும் விடக்கூட சிறிதும் குறையாத ஹிம்சையின் பலத்தில் நடந்து வருவதுதான். இவையிரண்டிற்கும் உள்ள ஒரே வித்தியாசம் பிந்திய மூன்று நாடுகளிலும் நடக்கும் ஹிம்சை ஆட்சி முந்திய மூன்று ஜனநாயக நாடுகளை விட அதிகக் கட்டுப்பாட்டுடன் நடத்தப்படுவதுதான். ஆயினும் நாம் இன்று இந்த நாடுகளிடையே ஆயுதங்களை உண்டாக்கி குவிப்பதில் பைத்தியக்காரத்தனமான போட்டி நடந்து வருவதைப் பார்க்கிறோம். இவைகளிடையே ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் மோதல் நிகழவே போகிறது. அது வந்து ஜனநாயகங்கள் வெல்லுமானால் அந்த வெற்றி அந்த நாட்டு மக்கள் தம் அரசாங்கத்தில் தமக்கும் பங்கு இருப்பதாக எண்ணிக்கொண்டு அளிக்கும் ஆதரவினாலேயே வரவேண்டும். மற்ற மூன்று நாடுகளிலும் மக்கள் தம் மீது ஆட்சி செலுத்தும் சர்வாதிகாரத்தை எதிர்த்துக் கிளம்பலாம்.

ஒரு நாடு முழுவதும் அஹிம்சையை ஏற்றுக் கொண்டாலல்லது அங்கே சட்ட பூர்வமான ஆட்சியோ, ஜனநாயகமோ நடப்பது சாத்தியமல்ல என்று நான் நினைப்பதாலேயே என் சக்தி முழுவதையும் கொண்டு தனிமனிதன் வாழ்விலும் சமூகத்திலும், அரசியலிலும் தனி நாடுகள் விஷயத்திலும், உலக அரங்கிலும் எல்லோரும் அஹிம்சையை வாழ்வின் நியமமாக ஏற்றுக்கொள்ளச் செய்யப் பாடு பட்டு வருகிறேன். எனக்கென்னவோ மங்கலாக வேனும் சத்தியத்தின் ஒளி தென் படுவதாகத் தோன்றுகிறது. சத்தியம் முழுவதையும் கண்டு விட்டதாய் சொல்லிக் கொள்ளாமையினாலேயே ஒவ்வொரு சொல்லையும் கவனித்து வெகு ஜாக்கிரதையாக எழுதுகிறேன். நான் நடத்தியுள்ள பரிசோதனைகள் எங்கெல்லாம் வெற்றி கண்டன என்று எனக்குத் தெரிவதைப் போலவே, என் தோல்விகளும் எனக்குத் தெரியும். ஆனால் பெற்றுள்ள வெற்றிகளே எனக்கு அழியாத நம்பிக்கை ஊட்டுவதற்குப் போதுமானவை.

நாம் செல்ல வேண்டிய வழியில், கையாள வேண்டிய சாதனங்களின் விஷயத்தில் கவனமாய் இருந்தால் இறுதி விளைவைப் பற்றிய கவலையே வேண்டியதில்லை என்று எத்தனையோ முறை சொல்லியிருக்கிறேன். அஹிம்சை

நமது சாதனம் அல்லது வழியும். ஒவ்வொரு நாடும் பெறவேண்டியது பூரண சுதந்திரமும் ஆகும். உலகிலுள்ள சிறிதும் பெரிதுமான எல்லா நாடுகளும் பூரண சுதந்திரம் அடையும் போதுதான் இவையெல்லாம் சேர்ந்து அமைந்த உலக சங்கம் உருவாக முடியும். அந்த சுதந்திரத்தின் தன்மை சம்பந்தப்பட்ட நாடுகள் புரிந்து கொண்டு அனுஷ்டிக்கும் அஹிம்சைக்கு ஏற்ப இருக்கும். ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். அஹிம்சையின் அடிப்படையிலமைந்த உலக சமுதாயத்தில் மிக மிகச் சிறிய நாடும் தான் மிகப் பெரிய நாட்டிற்கும் சமம் என்பதை உணரும், அப்போது உயர்ந்தது தாழ்ந்தது என்ற எண்ணம் அறவே அழிக்கப்படும்.

அஹிம்சையோடு நீங்காது பிணிப்புண்ட என்னைப் போன்றவனுக்கு அஹிம்சை வெறும் செயல் முறையாக அன்றி உயிருள்ள சக்தியாகவும், மாற்ற முடியாத கொள்கையாகவும் கொள்ளப்படாதிருக்கும் வரையில் சட்டரீதியான அல்லது ஜனநாயக அரசாங்கம் என்பது எப்பொழுதோ வரப்போகும் ஒரு கனவாகத் தான் இருக்கும். அகில உலகிலும் அஹிம்சையின் ஆட்சியை நிறுவுவது பற்றி நான் பிதற்றிக் கொண்டிருந்தாலும் பரிசோதனைகளை இந்தியாவில் மட்டுமே நடத்தி வருகிறேன். அது இங்கே வெற்றி பெற்றால் அதை உலகமும் சிரமமின்றி ஏற்றுக்கொள்ளும். இதில் ஒரு பெரிய சந்தேக அம்சத்தைச் சேர்த்தே பேசுகிறேன். விரைவில் காரியம் நடவாதது குறித்து நான் கவலைப்படவில்லை. எதுவுமே விளங்காத பேரிருளிலும் என் நம்பிக்கை சுடர்விட்டு ஒளிர்ந்து கொண்டிருக்கிறது.

- ஹரிஜன், 11.2.1939 பக்கம் 8

அது மக்களனைவருக்கும் பிரதிநிதித்துவம் வகிப்பதாகையால் எந்த அரசாங்கத்தினாலும் முழுதும் அஹிம்சையைக் கடைப்பிடிக்க முடியாது. அத்தகைய பொற்காலம் வருமென்று நான் இன்று எண்ணவில்லை. ஆனால் மக்களில் பெரும்பாலோர் அஹிம்சை வழி நடப்பவர்களாய் உள்ள சமுதாயத்தை உருவாக்கலாமென்று நிச்சயமாய் நம்புகிறேன். நான் பாடுபட்டுக் கொண்டிருப்பது அதன் பொருட்டே.

- ஹரிஜன், 9.3.1940, பக்கம் 31

கேள்வி : ஜனநாயகத்தை அஹிம்சையின் மூலம்தான் காக்க முடியும் என்று நீங்கள் சொல்வது ஏன் (கேள்வி கேட்டவர் ஓர் அமெரிக்க நண்பர்)

பதில் : காரணம், அது ஹிம்சையை நம்பி இருந்து வரும் வரையில் அதனால் தெம்பில்லாத ஏழை மக்களுக்கு உதவவோ, பாதுகாப்பளிக்கவோ முடியாது என்பது தான். நான் நினைக்கும் ஜனநாயகத்தில் மிக மிக எளியவர்களுக்கும் மிகுந்த தென்புள்ளவர்களுக்குக் கிடைக்கும் வாய்ப்பும் சந்தர்ப்பங்களும் கிடைக்கவேண்டும். அது அஹிம்சையின் ஆட்சியில்"அல்லாது சாத்தியமல்ல. இன்று உலகின் எந்த நாடும் எளிய நாடுகளையும் மக்களையும்

மிகவும் இழிந்தவை போலும், தாம் மிகவும் உயர்தவைபோலும் எண்ணியே நடக்கின்றன. எளியவர்கள் எப்படியோ போகட்டும் என்றே எல்லோரும் நினைக்கிறார்கள். உங்கள் நாட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். இன்று அது ஒரு சில பெரிய முதலாளிகள் கையில், அவர்களின் உடமையாக இருந்து வருகிறது. தென்னாப்பிரிக்காவின் விஷயத்திலும் இது உண்மையாகும். எல்லோருக்கும் தெரிந்தோ மறைத்தோ கையாளப்படும் ஹிம்சையினாலன்றி இந்தப் பெரிய சொத்துக்களை வைத்துக் கொண்டிருப்பது சாத்தியமல்ல. இன்று மேல் நாடுகளில் செயல்பட்டு வரும் ஜனநாயகம் உக்கிரம் தணிக்கப்பட்ட நாஜிசமும் பாஸிஸமுமேயல்லாது வேறல்ல; புகழ்ச்சியாகச் சொன்னால் ஏகாதிபத்தியத்தின் நாஜிசப் போக்கையும் பாஸிஸ்டுப் போக்கையும் மறைக்கும் போர்வையாகவே அது இருந்து வருகிறது என்று சொல்ல வேண்டும். கொள்ளைப்பொருளில் பங்குபெறும் ஆசையைத் தவிர இன்று நடக்கும் இந்தப் போருக்கு வேறு என்ன காரணம் சொல்லுவது. பிரிட்டன் இந்தியாவைக் கைப்பற்றியது ஜனநாயக முறைகளினாலல்ல. தென்னாப்பிரிக்காவில் நடக்கும் ஜனநாயக ஆட்சிக்கு அர்த்தமென்ன? அந்நாட்டின் பழைய குடிமக்களான நீக்ரோக்களிடமிருந்து வெள்ளைக்காரரைக் காப்பதற்கென்றே அதன் ஆட்சி முறை வகுக்கப்பட்டிருக்கிறது. வடக்கத்திய ராஜ்யங்கள் அடிமை முறையை ஒழிக்க நடவடிக்கை எடுத்திருப்பினும் உங்கள் நாட்டின் வரலாற்றை இன்னும் மோசமானது என்றே சொல்ல வேண்டும். நீங்கள் நீக்ரோக்களை நடத்தி வந்திருக்கும் முறை உங்களுக்கு அவப்பெயரளிப்பதாகும். இம்மாதிரியான ஜனநாயகங்களைக்காக்கவே இப்போது போர் நடத்தப்படுகிறது. இதில் ஏதோ பெரிய மோசடி கலந்திருக்கிறது. நான் தற்பொழுது அஹிம்சை முறையில் சிந்தித்து, ஹிம்சையின் வண்டவாளங்களை அம்பலப்படுத்த முயன்று கொண்டிருக்கிறேன்.

இந்தியா உண்மையான, அதாவது ஹிம்சைக் கலப்பில்லாத ஜனநாயகத்தை உருவாக்க முயன்று கொண்டிருக்கிறது. நாங்கள் இதற்கு கையாளும் கருவிகள் ராட்டை, கிராமக் கைத்தொழில்கள், சிறு குடிசைத் தொழில்களின் மூலம் அளிக்கப்படும் ஆரம்பக் கல்வி, தீண்டாமை ஒழிப்பு, சமூக ஒற்றுமை, கள்குடி ஒழிப்பு, அகமதாபாத்தில் போல் அஹிம்சா ரீதியில் தொழிலாளர் சங்கம் அமைத்தல் ஆகியவைகளில் வெளியாகும் சத்தியாகிரகத்தின் பல்வேறு உருவங்களாகும். இவைகளையெல்லாம் செய்ய மக்களெல்லோரும் முயலவும், மக்களுக்கு விஷயத்தை போதிக்கவும் வேண்டும். இவைகளைச் செய்ய எங்களிடம் பெரிய நிறுவனங்கள் உள்ளன. அவையெல்லாமே தாமே முன்வந்து பாடுபடும் ஊழியர்களால் அமைந்தவை. அவர்களுக்கு உள்ள பலமெல்லாம் அவர்கள் ஏழை எளியோருக்குச் செய்யும் பணியே.

இது அஹிம்சை முறையில் செய்யும் முயற்சியின் நீடித்த, நிலைத்த பகுதியாகும். இந்த முயற்சியிலிருந்து ஒத்துழையாமை, சாத்துவிகச் சட்ட மறுப்பு என்று அழைக்கப்படும் நடவடிக்கைகளில் அவை இறுதியில் போய் முடியும். பொது ஜன வரி மறுப்பையும் நடத்துவதற்குத் தேவையான சக்தி பெறப்படுகிறது. நாங்கள் ஒத்துழையாமையும் சாத்துவிகச் சட்ட மறுப்பும் நடத்தி போதுமான வெற்றியும் பெற்றிருப்பது உங்களுக்குத் தெரியும். இந்தப் பரிசோதனைக்கு மிகவும் ஒளி பொருந்திய எதிர்காலமிருக்கிறது. ஆயினும் நாங்கள் நடத்தியுள்ள போராட்ட மெல்லாம் நோஞ்சல்களின் போராட்டமாகவே இருந்து வந்திருக்கிறது. இதிலிருந்து பலசாலிகளின் எதிர்ப்பைத் தோற்றுவிப்பதே எங்கள் நோக்கம். உங்கள் போர்களினால் ஜனநாயகத்திற்கு என்றுமே பாதுகாப்பளிக்க முடியாது. இந்தியா, தான் நடத்திவரும் சோதனையினால் - எதிர்பார்க்கும் அளவுக்கு மக்கள் மட்டும் முன்வந்து காரியங்களைச் செய்தால் - வெற்றி பெற முடியும், வெற்றி பெறவே போகிறது. இதையே வேறு வகையில் சொன்னால் கடவுள் எனக்கு அதற்குத் தேவையான அறிவையும் ஆற்றலையும் தந்தால் பரிசோதனை நிச்சயமாய் வெற்றி பெறும்.

- ஹரிஜன், 18.5.1940, பக்கம் 129

தென்னாப்பிரிக்காவில் போயர் போர் நடந்த போது நான் பிரிட்டிஷ் சிப்பாய்களிடம் கேட்டதற்கு தாம் எதற்காகப் போரிடுகிறோம் என்று அவர்களுக்கு சொல்லத் தெரியவில்லை. போர் வீரர்களென்றால் தம் மேலதிகாரிகள் ஏவலை, உத்தரவை நிறைவேற்ற வேண்டுமே தவிர, ஏன்? எதற்காக ? என்றெல்லாம் கேட்கக்கூடாது தான். இவர்களுக்கோ தம்மை எங்கே அழைத்துப் போகிறார்கள் என்பது கூட தெரியவில்லை. நான் லண்டனில் இருந்து, பிரிட்டிஷ் மக்களிடம் அவர்களின் வீரர்கள் பெர்லின் நகரை ஏன் பாழாக்கி வருகிறார்கள் என்று கேட்டிருந்தால் அவர்களாலும் எனக்கு அதிகத்திருப்திகரமான பதில் அளித்திருக்க முடியாது. பத்திரிகைகளில் வெளியாகும் விவரங்களை நம்புவதனால், பிரிட்டிஷாரின் திறமையும் வீரமும் ஜெர்மானியர்கள் லண்டனில் செய்த நாசத்தை விட அதிகமாக பெர்லினில் விளைவித்திருக்கின்றன. ஜெர்மன் மக்கள் பிரிட்டிஷ் மக்களுக்கு இழைத்த தீங்குதான் என்ன? அவர்களின் தலைவர்கள் தீங்கிழைத்திருக்கிறார்கள் என்றால் அவர்களை தாராளமாக தூக்கிலேற்றுங்கள். ஆனால் ஜெர்மானியர்களின் வீடுகளையும் ஜெர்மன் மக்களின் அமைதியான வாழ்க்கையையும் எதற்கு அழிக்க வேண்டும்? இந்த பைத்தியக்காரத்தனமான அழிவு முழுதும் சர்வாதிகாரத்தின் ஏவலினால் நடந்திருக்கிறதென்றோ, புனிதமான சுதந்திரத்தின் அல்லது ஜனநாயகத்தின் பெயரால் நடந்திருக்கிறதென்றோ சொன்னால் உயிரிழந்தவர்களுக்கும், பெற்றோரை இழந்த அநாதைகளுக்கும், வீட்டை இழந்து தெருவில் நிற்கவேண்டியுள்ளவர்களுக்கும் என்ன புரியும்?

சுதந்திரமும் ஜனநாயகமும் அவற்றை நடத்துவோரின் கை ஒரு பாவமுமறியாத மக்களின் ரத்தத்தில் தோய்ந்துவிடும் போது பெரும் பாவங்களாக ஆகிவிடுகின்றன என்று நான் மிகவும் பணிவுடனும், ஆனால் என் சக்தி முழுவதையும் கொண்டு அழுத்திச் சொல்வேன். என்றுமுள்ள ஏசுநாதர், "எனது குழந்தைகளென்று சொல்லிக்கொள்ளும் இவர்களுக்கு தாம் செய்வது என்னவென்றே புரியவில்லை. என் பரம பிதாவின் முக்கியமான கட்டளையை மீறுவதனால் அவர்கள், 'தந்தையே, தந்தையே' என்று அவரை வீணில் தான் கூவி அழைக்கிறார்கள்" என்று சொல்லுவது என் காதில் விழுகிறது. நான் கேட்டதில் பிழை இல்லையென்று நினைக்கிறேன். ஒருக்கால் பிழை செய்திருந்தாலும் அதை பெரியோர் பலருடன் சேர்ந்தே செய்திருக்கிறேன்.

மேலும், நான் உண்மையை உரைத்திருப்பது ஏன்? ஏனெனில், கடவுள் என்னை இன்னும் சிறந்த வழி ஒன்றைக் காட்டுவதற்குக் கருவியாகக் கொண்டிருக்கிறார் என்ற நம்பிக்கை எனக்கு இருப்பதனால்தான். பிரிட்டன் நியாயம் கோருவதானால் அது ஆண்டவனின் நியாயப் பெருஞ்சபையில் தன் கைகளை நன்றாகக் கழுவிக்கொண்டு, தூய்மையுடன் வந்து நிற்கவேண்டும். போரைப்பற்றிய வரையில் சர்வாதிகாரிகளின் முறைகளைக் கடைபிடிப்பதன் மூலம் அதனால் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் காக்கமுடியாது. ஹிட்லர் எவ்வளவோ நல்லவன் என்று எல்லோரும் சொல்லும் வகையில் போரில் கொடுமைகள் செய்தபின், அதனால் தன் வழியைத்திருத்திக்கொண்டு திரும்ப முடியாது. கடந்த போர் இடி ஒலியுடன் நமக்குப்பாடம் கற்பித்திருக்கிறது. அது ஒருக்கால் வெற்றி பெற்றாலும் அந்த வெற்றி அதற்கே ஆபத்தாகவும் ஏமாற்றமாகவுமே இருக்கப் போகிறது. நான் போடும் கூப்பாடு வனாந்தரத்தில் கத்தியதுதான், எவர் காதிலும் விழப்போவதில்லை என்று எனக்குத் தெரியும். ஆனால் அது மிகவும் சரியான எச்சரிக்கை என்பது பின்னொரு காலத்தில் விளங்கும். சுதந்திரமும் ஜனநாயகமும் உண்மையிலேயே காக்கப்பட வேண்டுமானால் ஆயுதம் தாங்கி நடத்தும் எதிர்ப்புக்குச் சிறிதும் குறையாத வீரமும் சிறப்பும் வாய்ந்த சாத்துவிக எதிர்ப்பினாலேயே அது சாத்தியம். அது ஆயுதஎதிர்ப்பை விட எவ்வளவோ அதிக வீரமும் பெருமையும் பொருந்தியதாய் இருக்கும். காரணம், அதில் ஈடுபடுவோர் தம் உயிரையளிப்பார்களே தவிர பிறர் உயிரை பறிக்க மாட்டார்கள் என்பதுதான். - ஹரிஜன், 29.9.1940, பக்கம் 302

நான் நமது மக்களிடம், "ராணுவம் போலீஸ் ஆகியவற்றின் உதவியை நம்பியிராதீர்கள். நீங்கள் ஜனநாயகத்தை நிலைநிறுத்தியாக வேண்டும். ஜன நாயகமும் ராணுவத்தையும் போலீசையும் நம்பியிருப்பதும் ஒன்றோடொன்று பொருந்தமாட்டா. நீங்கள் அதை ஓரிடத்தில் நல்லதென்று சொல்லிவிட்டு,

பிறிதோரிடத்தில் பழிக்க முடியாது. ராணுவ உதவி உங்களை இழிவுறச் செய்துவிடும்" என்று சொல்லியிருக்கிறேன். ஒரு ஜனநாயகத்தில் வாக்களிக்கும் எல்லோரும் ஒரு போக்கிரியை அரசாங்கத்தின் தலைவனாக நியமித்தால் அவர்கள் அதன் பலாபலனை அனுபவித்தே தீரவேண்டும்; அல்லது நாட்டு மக்கள் மனத்தை, தேவையானால் சத்தியாக்கிரகத்தின் மூலம் மாற்ற வேண்டும். அது தான் ஜனநாயகம்.

- ஹரிஜன், 12.1.1947, பக்கம் 488-89

## 3. அஹிம்சையின் அடிப்படையில் அமைந்த ஜனநாயகத்தில்

அஹிம்சையின் அடிப்படையில் அமைந்த ஜனநாயகத்தில் எவருக்கும் பிறர் எவருடனும் பகையிராது. ஒவ்வொருவரும் - அவர் ஆடவரோ பெண்ணோ - பொது நலனுக்காக தம் பங்கைச் செலுத்துவார். எல்லோருக்கும் எழுதவும் படிக்கவும் தெரிந்திருக்கும். அவர்களின் அறிவு நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேயிருக்கும், சிறிதும் பெரிதுமான எல்லா நோய்களுமே கூடிய வரையில் குறைந்திருக்கும். எவரும் பரம ஏழையாக இரார். எல்லோருக்கும், எல்லாத் தொழிலாளருக்கும் செய்ய எப்பொழுதும் வேலை இருந்து கொண்டேயிருக்கும். இத்தகைய அரசாங்கத்தில் சூதோ, கள்குடியோ, பிற நடத்தைக்கேடுகளோ, சாதி துவேஷமோ இராது. பணக்காரர்கள் தம் செல்வத்தை புத்திசாலித்தனமாகவும், உபயோககரமாகவும் செலவழிப்பார்களேயன்றி, ஆடம்பரங்களிலும் சிற்றின்பங்களிலும் பாழ்படுத்த மாட்டார்கள். ஒரு சிலர் விலையுயர்ந்த கற்கள் வைத்திழைத்த அரண்மனைகளில் வாழ்வதும், கோடிக்கணக்கான மக்கள் எலிவளைகள் போன்று வெளிச்சமோ காற்றோ புகுவதற்கு வகையில்லாத குடிசைகளில் வாழ்வது என்பதும் இராது. அஹிம்சை மயமான சுயராஜ்யத்தில் எவரும் பிறருடைய நியாயமான உரிமைகளைப் பறிக்க மாட்டார். அதாவது நியாயத்திற்கு மாறான உரிமைகள் எவருக்கும் இரா. முறைப்படி அமைந்து, ஒழுங்காக இயங்கும் அரசாங்கத்தில் பிறர் உடமைகளைப் பறிப்பதற்கு இடம் இராதாகையால் பிறர் பொருளைப் பறித்தவர்களிடமிருந்து அதை மீண்டும் வாங்கி உரியவர்களிடம் சேர்ப்பதற்காக போலீசையும் அதிகாரங்களையும் பயன்படுத்தவே முடியாது.

- ஹரிஜன், 25.3.1939, பக்கம் 56

ஒருவர் தீவிரமாய் அஹிம்சா மார்க்கத்தில் சென்று கொண்டிருந்தால் அவரால் எந்த இடத்தில் அக்கிரமம் நடந்தாலும் அதை எதிர்த்துக் கிளம்பாது இருக்க முடியாது. துரதிருஷ்டவசமாக மேல்நாட்டு அபேதவாதிகள் எனக்குத் தெரிந்த வரையில் சோஷலிச தத்துவங்களை அமுலுக்குக் கொண்டுவர

பலாத்காரத்தின் உதவியை நாடியே ஆக வேண்டுமென்று நம்புகிறார்கள். நானோ சமுதாயத்தில் மிகவும் இழிந்த நிலையில் இருப்பவர்களுக்கும் நியாயம் கிடைக்கச்செய்வதற்கு பலாத்காரத்தின் உதவியை நாடுவது சரியல்ல, அதனால் நம் நோக்கம் நிறைவேறாது என்று நம்பி வந்திருக்கிறேன். மேலும், அந்த ஏழை எளியோருக்கு சரியான பயிற்சி அளிப்பதன் மூலம் அவர்களை தாமே அஹிம்சை முறையில் தமது கஷ்டங்களை போக்கிக்கொள்ள செய்துவிடலாம் என்றும் நம்பி வந்திருக்கிறேன். அதற்குள்ள வழி அஹிம்சை முறையில் ஒத்துழையாமை செய்வது தான். சில சமயங்களில் ஒத்துழைப்பைப் போலவே ஒத்துழையாமையும் நம் கடமையாகி விடுகிறது. எவரும் தாம் அளிக்கும் ஒத்துழைப்பினால் தன் அழிவுக்கே வழி செய்து கொள்ளவோ, பிறருக்கு அடிமைப்படவோ தேவையில்லை. பிறர் எவ்வளவு நல்லவர்களாய் இருந்தாலும் அவர்கள் முயற்சியினால் பெறப்படும் சுதந்திரம் அவர்கள் முயற்சி நிறுத்தப்பட்டதும் தானே போய்விடும். அதன் பிறகு அதை நம்மால் காக்கமுடியாது. இத்தகைய சுதந்திரம் உண்மையானதல்ல என்பதுதான் இதற்கு அர்த்தம். ஆனால் அஹிம்சை முறையில் ஒத்துழையாமையின் மூலம் பெறப்படுகையில் மக்களில் மிகவும் இழிந்தவர்களும் அந்த சுதந்திரத்தின் ஒளியையும், அது தரும் இன்பத்தையும் பெறமுடியும்.

பலாத்காரத்தினால் என்றும் சாதிக்க முடியாததை அஹிம்சை முறையில் செய்த ஒத்துழையாமையினால் சாதிக்கலாம் என்பதிலும், இந்தச் சாதனை இறுதியில் நமக்குத் தீங்கிழைப்போர் மனத்தை மாற்றுவதனாலேயே சாத்தியமாகிறது என்பதிலும் எனக்கு சிறிதும் சந்தேகமேயில்லை. இந்தியாவிலுள்ள நாம் அஹிம்சையை தக்க முறையில் என்றுமே சோதித்ததில்லை. இவ்வாறிருந்தும் தமது கலப்படமான அஹிம்சையின் மூலம் நம்மால் இவ்வளவு சாதிக்க முடிந்திருப்பது ஆச்சரியம்தான்.

மதிப்புடன் வாழத் தேவையானதற்கு அதிகமாய் எவரும் நிலம் வைத்திருக்கக்கூடாது. நம் மக்களை வாட்டும் ஏழைமைக்குக் காரணம் அவர்களுக்கு தன்னுடையதென்று சொல்லிக் கொள்ள ஒரு அங்குல நிலமும் இல்லாததே என்பதை யாரே மறுப்பர்?

ஆனால் இந்தச் சீர்திருத்தத்தை நினைத்த மாத்திரத்தில் செய்து விட முடியாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இதை அஹிம்சை முறையில் செய்வதென்றால் அதற்குள்ள ஒரே வழி பொருளும் நிலமும் உள்ளவர்களுக்கும், இவற்றில் எதுவும் இல்லாதவர்களுக்கும் அவரவர் கடமையை உணர்த்துவதுதான். செல்வந்தர்களுக்கு அவர்களை எதிர்த்து பலாத்காரம் செய்யப்படமாட்டாது என்று உறுதி அளிக்கவேண்டும். ஏழை எளியோருக்கோ அவர்கள் விரும்பாதபோது பிறர் அவரை எதையும் செய்யும்படி பலவந்தம் செய்யமுடியாதென்றும், அவர்கள்

அஹிம்சை அல்லது நியாயத்திற்காகவும் தர்மத்திற்காகவும் எல்லாக் கஷ்டங்களையும் அனுபவிக்கக் கற்றுக் கொண்டதும் அவர்களுக்கு விடுதலை கிடைத்துவிடுமென்றும் போதிக்க வேண்டும். நமது நோக்கம் நிறைவேற வேண்டுமானால் நான் மேலே விவரித்துள்ள போதனையை இப்பொழுதே அளிக்க ஆரம்பித்து விடவேண்டும். அதற்கு முதற்படியாக எங்கும் பரஸ்பரம் மரியாதையும் மதிப்பும் அளிக்கப்படவும், ஒருவர் மற்றவரை நம்பவும் வேண்டும். இவ்வாறு செய்தால் பணம் படைத்த மேல் வகுப்பாருக்கும் ஏழைகளான சாதாரண மக்களுக்குமிடையே பலாத்காரமான சண்டை பூசல்கள் நிகழமாட்டா.

- ஹரிஜன், 20.4.1940, பக்கம் 97

இந்த நிலையை எய்தும் பொருட்டு நாம் வேதாந்திகளைப் போல எதிலும் படாமலிருந்து எல்லோரும் அபேதவாதிகளாக மாறியாகும் வரையில் எந்த நடவடிக்கையுமே எடுக்கத் தேவையில்லை என்று சொல்லிக் கொண்டிருக்கக் கூடாது. நம் வாழ்க்கையை மாற்றாதபோது மேடைகளில் ஏறி பிரசங்கங்கள் செய்து கொண்டும் கட்சிகளமைத்துக் கொண்டும், பருந்தைப் போல எங்கேனும் இரை கிடைத்ததும் அதில் போய் விழுந்து கொண்டுமேயிருப்போம். இவ்வாறு இருப்பது அபேதவாதமாகாது. நாம் அதை கிடைத்த போது பற்றிக் கொள்ள வேண்டிய இரையென்று எண்ண எண்ண, அது நம் பிடியில் சிக்காது விலகிக்கொண்டே தான் இருக்கும்.

அபேதவாதம் முதலில் நம்மிடமிருந்தேதான் தொடங்க வேண்டும். ஓர் அபேதவாதி தோன்றி விட்டால் ஒன்றையடுத்து பூஜ்யத்தைச் சேர்ப்பது போல சேர்த்துக் கொண்டே போகலாம். அப்போது முதல் பூஜ்யத்தினால் ஒன்று பத்தாகி விடும்; பிறகு சேரும் ஒவ்வொரு பூஜ்யத்தினாலும் அதற்கு முன் இருந்தது 10 மடங்காகப் பெருகிக்கொண்டே போகும். இதற்கு மாறாக முதலில் எவருமே அதை ஏற்காமல் வெறும் பூஜ்யமாயிருந்தால் அதையடுத்த எவ்வளவு பூஜ்ஜியங்களைச் சேர்த்தாலும் அதன் மொத்த மதிப்பு பூஜ்யமாகவேதானிருக்கும். இந்தப் பூஜ்யங்களை எழுதுவதற்கு ஆன நேரமும் அவை எழுதப்பட்ட காகிதமும் எல்லாமே வீண்தான்.

இந்த அபேதவாதம் பளிங்குக் கல்லைப் போன்று மிகவும் தூயது. ஆகவே அதை எய்துவதற்கும் பளிங்கு போன்ற தூய முறைகளே தேவை. தூயதல்லாத வழிகளில் சென்றால் நாம் போய்ச்சேரும் இடமும் தீயதாய்த்தான் இருக்கும். எனவே ஓர் அரசனையும் ஆண்டியையும், பெரிய மிராசுதாரையும் ஏழைக்குடியானவனையும் சமநிலைக்குக் கொண்டுவர அரசனின் தலையையும் மிராசுதாரின் தலையையும் சீவுதல் வழியல்ல. இம்முறையினால் முதலாளியையும்

தொழிலாளியையும் சமநிலைக்குக் கொண்டுவர முடியாது. பொய் வழியில் சென்றால் நம்மால் சத்தியத்தைச் சேரமுடியாது. உண்மை வழி தான் நம்மை உண்மையிடம் கொண்டு போய்ச் சேர்க்கும். அஹிம்சையும் சத்தியமும் இரட்டைப் பிள்ளைகளல்லவா என்று சிலர் கேட்கிறார்கள். இதற்கு நான் சொல்லும் பதில், "அல்லவே அல்ல" என்பதுதான். அஹிம்சை சத்தியத்தில் பொதிந்திருப்பது; அதே வகையில் சத்தியத்தில் அஹிம்சை அடங்கியிருப்பது. இதனாலேயே இவையிரண் டும் ஒரே நாணயத்தின் தலையும் பூவையும் போன்றவை என்று சொல்லப்பட்டி ருக்கிறது. இவை இரண்டையும் தனித்தனியே பிரிக்க முடியாது. நாணயத்தின் தலைப்பக்கத்தைப் பாருங்கள்; பிறகு திருப்பி பூவைப்பாருங்கள். இரு புறமும் உள்ள எழுத்துக்கள் வெவ்வேறாயிருக்கும். ஆனால் மதிப்பு மட்டும் ஒன்றாகத் தான் குறிக்கப்பட்டிருக்கும். இந்தப் போற்றத்தக்க நிலையை பரிபூரணமாக தூய்மையின்றேல் எய்த முடியாது. உங்கள் மனத்திலோ, உடலிலோ சிறு மாசு நேர்ந்தாலும் நீங்கள் பொய்க்கும் பலாத்காரத்திற்கும் இடம் கொடுத்ததாகிவிடும்.

ஆகையால் உண்மையானவர்களும், அஹிம்சையில் ஊறியவர்களும், தூய உள்ளம் படைத்தவர்களுமான அபேதவாதிகளால் தான் இந்தியாவிலும் உலகிலும் அபேத சமுதாயத்தை நிறுவ முடியும். எனக்குத் தெரிந்த வரையில், இன்று உலகில் உண்மையில் அபேத வாதத்தை முற்றிலும் கடைப்பிடிக்கும் நாடு எதுவுமே இல்லை. மேலே விவரித்துள்ள வழியில் சென்றாலல்லது அத்தகைய சமுதாயத்தைத் தோற்றுவிப்பது சாத்தியமல்ல.

- ஹரிஜன், 13.7.1947, பக்கம் 232

## 4. ஆட்சியற்ற ஜனநாயகம்

'அரசியலில் அஹிம்சையைக் கையாள முடியுமா?' என்று காந்தியடிகளிடம் ஒரு சமயம் கேட்கப்பட்டது.

அதற்கு அவர் 'குடும்பங்களில் அதை எப்படிக்கையாளலாமோ அதே வகையில் அரசியலிலும் கையாளலாம். நாம் அதை மிகவும் திறமையாக உப யோகியாது இருக்கலாம். ஆனால் எந்த நிலையிலும் பலாத்காரத்தில் இறங்குவ தில்லை என்ற உறுதிமட்டும் இருந்தால் முதலில் தோற்ற நாம் பிறகு வெற்றியடைவோம்' என்று விடையளித்தார்.

'நீங்கள் அஹிம்சை முறையில் ஆட்சி நடத்துவோம் என்கிறீர்கள். ஆனால் ஆட்சிக்கு உதவவென நாம் இயற்றும் எல்லாச்சட்டங்களுமே பலாத்கா ரத்தில் தோய்ந்தவை தாமே.'

'அல்ல. எல்லாச் சட்டங்களையுமே அவ்வாறு சொல்லமுடியாது. தாமே இயற்றிக்கொண்ட சட்டங்கள் சமூகத்தில் சாத்தியமான அளவுக்கு அஹிம்சை மயமானவையாகத்தான் இருக்கும். பூரண அஹிம்சையின் அடிப்படையில் அமைந்து இயங்கும் சமுதாயம் தூய அராஜகம்தான்.'

'அதை நீங்கள் காரிய சாத்தியமான லட்சியம் என்று கருதுகிறீர்களா?'

'ஆம், எந்த அளவுக்கு அஹிம்சை காரிய சாத்தியமோ அந்த அளவுக்கு இதுவும் சாத்தியமே. எந்த அரசாங்கத்தில் மக்கள் மிகவும் குறைவாக ஆட்சி செய்யப்படுகிறார்களோ அதுவே பூரணத்துவம் எய்தியதும், அஹிம்சை மயமானதும் ஆகும். மிகவும் தூய அராஜகத்தைக் காண வேண்டுமானால் அஹிம்சையின் அடிப்படையில் அமைந்த ஜனநாயகத்தில் தான் காணமுடியும். ஐரோப்பாவில் நடக்கும் ஜனநாயகங்கள் எல்லாமே ஜனநாயகத்திற்கு நேர் மாறானவை என்பது என் கருத்து.'

'நீங்கள் கருதும் அஹிம்சை முறையில் அமைந்த ஜனநாயகம் பண்டைக் காலத்தில் எங்கேனும் இருந்ததுண்டென்று நினைக்கிறீர்களா?'

'எனக்குத் தெரியாது. இருந்ததில்லையென்றால் நாம் நம்மிடமுள்ள மிகவும் உயர்ந்த ஒன்றை எய்த முயற்சி செய்யவில்லை என்று தான் அர்த்தம். ஏதோ ஒரு கட்டத்தில் நாம் இப்பொழுதைவிட அதிக அறிவுள்ளவர்களாயிருந்தோம். இன்றைப் பார்க்கிலும் அதிக அறிவு பெற்றால்தான் மனித சுபாவத்தில் பொதிந்துள்ள பேரழகுகளையெல்லாம் கண்டுகளிக்க முடியும் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. பூரண அஹிம்சையென்பது நாம் இவ்வுலகில் இவ்வுடலைத் தாங்கியிருக்கும் வரையில் - நமக்கு ஒரு சிறு இடமேனும் தேவைப்படுமாகையால் - சாத்தியமல்ல. உடலில் குடியிருந்துவரும் வரையில் பூரண அஹிம்சை என்பது யூக்லிடின் புள்ளி அல்லது நேர்கோட்டைப்போல ஒரு கருத்தாகத்தானிருக்கும். ஆனால் அதை எய்தும் பொருட்டு நம் வாழ்வின் ஒவ்வொரு கணமும் நாம் முயன்றாக வேண்டும்.'

- ஹரிஜன், 21.7.1940, பக்கம் 211

லட்சிய சமுதாயத்தில் அரசாங்கம் என்று ஒன்று இருக்க வேண்டுமா, வேண்டாமா என்ற கேள்வி பாக்கியிருக்கிறது. இதைப் பற்றி இந்த சமயத்தில் நாம் நம்மை அலட்டிக்கொள்ள வேண்டாமென்றே எனக்குத்தோன்றுகிறது. அத்தகைய சமுதாயத்திற்காக நாம் தொடர்ந்து பாடுபட்டால், அது மெதுவாக, மக்களுக்குப் பயன்படுமளவுக்கு தானே உருவாகும். யூக்லிடின் நேர்கோட்டிற்கு அகல பரிமாணமே கிடையாது. ஆனால் இதுவரையில் அதை எவராலும் வரைய முடிந்ததில்லை; என்றுமே வரைய முடியப் போவதுமில்லை. இவ்வாறிருந்தும் இந்த லட்சியக்கோட்டைக் கருத்தில் கொண்டதனால் தான் நம்மால் ஜியோமிதியில்

முன்னேற முடிந்தது. இதைப்போல்தான் எல்லா லட்சியங்களின் விஷயமும்.

உலகில் எங்குமே அரசாங்கமில்லாத நாடு இல்லை என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். என்றேனும். எங்கேனும் அமையுமானால் அது இந்தியாவில் தான் சாத்தியம். ஏனெனில் நம் நாடு ஒன்றில்தான் அதற்கான முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. அதற்குத் தேவையான அளவு வீரம் நாம் இன்னும் பெற்றபாடில்லை. அதைப் பெறுவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அந்த வழியில் நம்பிக்கை உள்ளவர்கள் அவை பிறருக்கு நிதரிசனமாகக் காட்டவேண்டும். அதைச் செய்ய நாம் இப்போது சிறைகளிடம் நமக்கிருந்த பயத்தை ஒழித்துவிட்டதைப் போல, சாவினிடமுள்ள அச்சத்தையும் அறவே அகற்றிக் கொண்டுவிட வேண்டும்.

- ஹரிஜன், 15.9.1946, பக்கம் 309

உலக வரலாற்றிலேயே நம் சுதந்திரப் போராட்டத்தைவிட அதிக ஜன நாயக ரீதியில் ஒன்று எங்குமே நடந்ததில்லை என்றும் நான் நம்புகிறேன். நான் சிறையில் இருந்தபோது கார்லைல் எழுதிய "பிரெஞ்சுப் புரட்சியின் வரலாறு" என்ற நூலைப்படித்தேன். ரஷ்யப் புரட்சியைப் பற்றி பண்டித ஜவஹர்லால் எனக்குச் சிறிது சொல்லியிருக்கிறார். ஆனால் இந்தப்போராட்டங்கள் எல்லாம் பலாத்கார முறையில் நடத்தப் பட்டவையாகையால் அவைகளினால் தமது லட்சியமான ஜன நாயகத்தை நிலைநாட்ட இயலவில்லை என்பது என் முடிவான கருத்து. நான் கருதும் ஜனநாயகத்தில், அஹிம்சை முறையில் அமைந்த ஜனநாயகத்தில் எல் லோருக்கும் சரிசமமான சுதந்திரம் இருக்கும்; ஒவ்வொருவரும் தமக்குத்தாமே எஜ மானராய் இருப்பார்.

"காந்தியடிகளுக்கும் அரசாங்கத்திற்கும் நடந்த கடிதப் போக்குவரத்து 1942-44" (ஆங்கிலம்) பக்கம் 173-74, பதிப்பு 1945

## 5. ஜனநாயகமும் அந்நியப் படையெடுப்பும்

ஓர் இராஜ்யத்தின் மக்களில் பெரும்பாலோர் அஹிம்சாவாதிகளாயிருந் தால், அஹிம்சையின் அடிப்படையில் அதன் ஆட்சியை நடத்தலாமென்று நான் நம்புகிறேன், எனக்குத் தெரிந்த வரையில் இந்தியாவில் ஒன்றில்தான் அத்தகைய இராஜ்யம் அமைவதற்கு வேண்டிய சாத்தியக்கூறுகள் உள்ளன. அந்த நம்பிக் கையில்தான் நான் என் சோதனையை நடத்தி வருகிறேன். எனவே தூய அஹிம்சை முறையில் இந்தியா சுதந்திரம் பெற்றதென்று வைத்துக் கொண்டால் அதே முறையில் இந்தியாவினால் தான் பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் முடியும். அஹிம்சையை ஏற்றுள்ள ஒரு மனிதனோ சமுதாயமோ வெளியேயிருந்து தம்மை யாரோ வந்து தாக்கப்போகிறார் என்று எதிர்பார்க்கவோ, அதற்கு வேண்டிய

பரிகாரங்கள் செய்யவோ மாட்டா. மாறாக, அத்தகைய மனிதன் அல்லது சமுதாயம் தன்னிடம் எவரும் வம்புக்கு வரமாட்டார் என்றே உறுதியாக நம்புவார்கள். எதிர் பார்த்ததற்கு மாறாக அப்படி ஏதேனும் நடந்தால் அஹிம்சை வழியில் செல்வோருக்கு இரண்டு வழிகள் உண்டு. ஒன்று, நாட்டை எதிரியிடம் விட்டு விட்டு, பிறகு அவனோடு ஒத்துழைக்க, அவனுக்கு எவ்வகையிலும் உதவ மறுப்பது. பண்டைக் காலத்திய நீரோ என்ற அரக்கனைப் போன்ற ஒருவன் இப்போது இந்தியாவின் மீது படையெடுத்து வந்தால் நம் ராஜ்யத்தின் பிரதிநிதிகள், நிர்வாகிகள் அவனை உள்ளே விடுவார்கள். ஆனால் அதே சமயத்தில் அவனுக்கு மக்கள் எவ்வகையிலும் உதவமாட்டார்களென்று அவனிடம் சொல்லி விடுவார்கள். பிறகு தம் உயிரை வேண்டுமானாலும் அளிப்பார்களே தவிர பகைவனுக்குப் பணியமாட்டார்கள். இரண்டாவது வழி, அஹிம்சை முறையில் பயிற்சி பெற்றுள்ள மக்கள் அஹிம்சா ரீதியில் பகைவனை எதிர்த்து நிற்பதாகும். அதாவது, எதிரியின் பீரங்கி வாயின் முன் நிராயுதப் பாணிகளாய்ப்போய் நின்று பலியாவார்கள். இந்த இரண்டு வழிகளிலுமே நீரோவைப்போன்ற கொடிய ராட்சதனுக்கும் உள்ளம் என்ற ஒன்று உண்டு என்ற நம்பிக்கையின் மீது நாம் நடந்துகொள்ளுகிறோம். தான் சிறிதும் எதிர்பாராத வகையில் வரிசை வரிசையாக நின்று, ஆடவர்களும் பெண்களும் தம் உயிரை அளிக்கிறார்களே தவிர தனக்குப் பணியவில்லை என்பதை அவன் பார்க்கையில் அவனும் சரி, அவன் படையினரும் சரி மாறாமல் இருக்க மாட்டார்கள். கணக்கெடுத்துப் பார்த்தால் இவ்வாறு செய்கையில் ஆகும் ஆள்சேதம் எதிர்த்து நின்று போரிடுகையில் நிகழ்வதை விட அதிகமிராது. ஆயுதங்களுக்காகவும் கோட்டை கொத்தளங்கள் அமைக்கவும் இதில் செலவே இல்லை. இவ்வாறெல்லாம் செய்யும் போது மக்கள் பெறும் அஹிம்சைப் பயிற்சியினால் எண்ணவே முடியாத அளவுக்கு அவர்களின் ஆன்மீக பலம் கூடும். அதில் கலந்து கொண்ட ஆடவரும் பெண்களும் போர் முனையில் நிற்கும் வீரர்களை விட எவ்வளவோ உயர்ந்த தீரமும் வீரமும் காட்டியிருப்பார்கள். அவர்களின் வீரம் வெளியாவது தாம் மரிப்பதிலேயே அன்றி பிறரைக் கொல்வதில் அல்ல.

இறுதியாக, சாத்துவிக எதிர்ப்பில் அதைச் செய்வோருக்கு தோல்வி என்பதே கிடையாது. இதுவரையில் எங்குமே இவ்வாறு நடந்ததில்லையே என்று என்னிடம் கேட்பது நான் கூறியுள்ளவைகளுக்கு சரியான பதிலாகாது. நான் நடக்கக் கூடாதது எதையும் குறித்துச் சொல்லவில்லை. உலக வரலாற்றில் நான் கூறியுள்ளது போல் எத்தனையோ தனி மனிதர்கள் அசாதாரணமான அஹிம்சையை வெளியிட்டிருக்கிறார்கள். போதிய பயிற்சி அளிக்கப்பட்டால் ஒரு மனிதர் குழாம் - அவர்கள் ஆடவர்களோ பெண்களோ - அஹிம்சா ரீதியில் நடந்து

கொள்ளமாட்டார்கள், ஒரு நாட்டு மக்களாலும் அவ்வாறு நடந்து கொள்ள முடியாது என்று சொல்வதற்கோ, நினைப்பதற்கோ ஒரு காரணமும் இல்லை. மனித இனத்தின் மொத்த அனுபவத்திலிருந்து, மனிதர்கள் எப்படியோ உயிர் வாழ்ந்து வருவதைப் பார்க்கையில், மக்கள் இனத்தின் மீது ஆட்சி புரிவது அன்பே என்று தெரியவருகிறது. ஹிம்சைக்கு, அதாவது துவேஷத்திற்குக் கட்டுப்பட்டு நடந்து வந்திருந்தால் நாம் எல்லோரும் மடிந்து மண்ணாகி எவ்வளவோ காலமாகியிருக்கும். இவ்வாறிருந்தும் இதிலுள்ள துக்ககரமான அம்சம் நாகரிகம் உள்ளவர்கள் என்று சொல்லப்படும் மனிதர்களும் நாடுகளும் சமுதாயத்தின் அடிப்படை பலாத்காரமே, துவேஷமே என்பது போல் நடந்து கொள்வது தான். அன்பே வாழ்க்கையின் தலையாய, தனிப்பெரும் நியதி என்பதை நிரூபிக்கும் பொருட்டு சோதனைகள் நடத்துகையில் எனக்கு உண்டாகும் இன்பத்திற்கு அளவேயில்லை. இதற்கு மாறான நிருபணங்கள் எவ்வளவு செய்யப்பட்டாலும் என் நம்பிக்கை சிறிதும் தளராது. இந்தியாவில் நடந்துள்ள கலப்படமான அஹிம்சை முயற்சியும் அதற்கு ஆதரவே அளித்திருக்கிறது. ஆனால் நம்பிக்கை இல்லாதவருக்கு நம்பிக்கை ஊட்ட இது போதாது என்றாலும், அனுதாபத்தோடு நோக்குகிறவர் ஆதரவைப் பெற இது போதுமானது.

- ஹரிஜன், 13.4.1940, பக்கம் 90

## 6. ஜனநாயகங்களும் சமாதானவாதிகளும்

சமாதானவாதிகள் தாம் எடுக்கும் நடவடிக்கையினால் தம் அரசங்கங்கள் தோல்வியுறும் அளவுக்கு அவைகளை பலவீனப்படுத்தக்கூடாது. ஆனால் அவ்வாறு நேர்ந்துவிடுமோ என்ற பயத்தினால், போர்களினால் எந்த நன்மையும் விளையாது என்பதில் தமக்குள்ள நம்பிக்கையை நிதரிசனமாகக் காட்டுவதற்குள்ள சந்தர்ப்பத்தையும் அவர்கள் நழுவ விடக்கூடாது. அவர்களின் அரசாங்கங்கள் அறிவை இழந்து போரை எதிர்ப்போரைக் கடுமையாக தண்டித்து, பெரிய தியாகிகள் ஆக்குவதானால் அதன் மூலம் தோற்றுவிக்கப்பட்ட அதிருப்தியின் விளைவை அவை அனுபவிக்கவேண்டியது தான். அது அவைகளுக்கு எவ்வளவு சங்கடமாயிருந்தாலும் தனிமனிதர்கள் தன் மனச்சாட்சிக்காக அஹிம்சையில் உறுதியாயிருப்பார்களானால் ஜனநாயகங்கள் இவ்வகையில் தனி மனிதர் சுதந்திரத்தை மதித்தே நடக்க வேண்டும். இதற்கு அவர்களுக்கு தம் மனச்சாட்சியும், சத்தியமும், நாட்டின் நலனென்று ஏதோ கருதப்படுகிறதே அதை விட உயர்ந்தவை என்றே அர்த்தம். ஏனெனில் தம் மனச் சாட்சியின்படி ஒருவர் நடக்கையில், அது உண்மையிலேயே அவ்வாறு இருக்குமானால், அதனால் இது வரையில் எவருக்கும், எவர் நலனுக்கும் எந்தத் தீங்கும் நேர்ந்ததில்லை.

ஆகையால் இதிலிருந்து வெளியாவது சாத்துவிகவாதி, 'ஜனநாயகங்கள் என்று சொல்லப்படுபவை வாழ்ந்தாலும், வீழ்ந்தாலும் இந்தப் போராட்டங்களினால் போர் முடியப் போவதே இல்லை; அது முடியவேண்டுமானால் இக்கட்டான சந்தர்ப்பத்தில் அஹிம்சாவாதிகளின் ஒரு கோஷ்டி தமக்கு அஹிம்சையில் உள்ள நம்பிக்கையை, தேவையானால், தம் உயிரை அளித்தேனும் நிரூபித்தாக வேண்டும்' என்பது தான். என்னைப்பற்றிய வரையில் நான் கவனிக்க வேண்டிய விஷயம், உயிரை அளிக்காமல் இருப்பதெப்படி என்பதல்ல. நம் நோக்கம் நிறைவேற நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதே. பெரிதும் குழப்புவதும் ஆனால் மிகவும் சக்தி வாய்ந்ததுமான நம்பிக்கை என்பது நடத்தையின் ஒரு பகுதியாகிவிடும் போது மனிதன் போடும் கணக்குகள் பயனற்றுப் போகின்றன. உண்மையான சாத்துவிகவாதி எவனும் உண்மையான சத்தியாக்கிரகியாகவே இருப்பான். சத்தியாக்கிரகி நம்பிக்கையைக் கொண்டு காரியங்கள் செய்வதால் விளைவைப் பற்றிக் கவலைப்படமாட்டான். ஏனெனில் தான் உண்மையாக நடந்து கொண்டால் அதற்கு நல் விளைவே ஏற்படும் என்று அவனுக்குத் தெரியும்.

பார்க்கப் போனால் ஜனநாயகமெனப்படும் நாடுகள் வெற்றி பெறுமானால் வரப்போகும் லாபம் என்ன? இந்தப் போர்கள் நிச்சயமாய் முடியப் போவதில்லை. ஜனநாயகங்கள் கட்டாய ராணுவ சேவையும் பிற கட்டாய முறைகளும் உள்ளிட்ட பாசிஸ்டுகளும், நாஜிகளும் கையாளும் எல்லா தந்திர மந்திரங்களையும் செய்து, மக்களிடமிருந்து பணிவை பலவந்தமாகக் கறந்தே இருக்கும். வெற்றிக்குப் பிறகு மக்கள் பெறப்போவது, பிற நாடுகளுடன் ஒப்பிடுகையில், ஓரளவு திருப்தியளிக்கக் கூடிய தனி மனித சுதந்திரத்தின் பாதுகாப்பாக இருக்கலாம். ஆனால் அந்தப் பாதுகாப்பு வெளியேயிருந்து பெறக் கூடிய உதவியைப் பொறுத்தது அல்ல; உலகமே எதிர்த்து வந்தாலும் சமாளிப்பது என்று தம்மனத்திற்கொள்ளும் உறுதியிலிருந்து பெறப்படுவது. இதையே வேறு வகையில் சொன்னால், முற்றிலும் அஹிம்சைச் சாதனங்களைக் கொண்டு தன் சுதந்திரத்தையும், எனவே தன் நாட்டின் சுதந்திரத்தையும், இறுதியில் மக்கள் இனம் முழுவதின் சுதந்திரத்தையும் பாதுகாப்பவனே உண்மையான ஜனநாயகவாதி. வரவிருக்கும் சோதனையில் சாத்துவிகவாதிகள் தம் நம்பிக்கையை தற்காப்புக்காகவோ, எதிரியைத் தாக்கவோ நடக்கும் போரில் தாம் எவ்வகையிலும் கலந்து கொள்ளாதிருந்து நிரூபிக்க வேண்டும். ஆனால் எதிர்த்தல் என்பது அஹிம்சையை கொள்கையாக கொண்டிருப்பவர்களின் கடமையாகுமே தவிர, மூளும் ஒவ்வொரு போரையும் ஆதரிப்பதா, வேண்டாமா என்று ஒவ்வொன்றின் சாதக பாதக அம்சங்களையும் எடை போட்டுப் பார்த்து முடிவு செய்பவர்களுடையது ஆகாது. இதிலிருந்து அத்தகைய எதிர்ப்பு ஒவ்வொருவரும் தம் மனச்சாட்சியின்

உதவியினால் அப்படி ஒன்று உண்டென்று அவர் நினைப்பதானால் தீர்மானிக்க வேண்டிய விஷயம் என்பது சொல்லாமலே விளங்கும். - ஹரிஜன் 15.4.1937, பக்கம் 89-90

## 7. ஜனநாயகமும் ராணுவமும்

கேள்வி : நீங்கள் அஹிம்சை முறையில் ஆட்சியை எப்படி நடத்துவீர்கள்?

பதில் : நாம் அஹிம்சை முறைகளினால் சுதந்திரம் பெற்று விட்டதாக வைத்துக்கொண்டால் அதற்கே நாட்டின் பெரும்பகுதி அஹிம்சா ரீதியில் ஒழுங்கு படுத்தப்பட்டு விட்டது என்று தான் அர்த்தம். மக்களில் பெரும்பாலோர் அஹிம்சையை ஏற்றுக்கொள்ளாத போது நம்மால் அஹிம்சா சுயராஜ்யம் பெறமுடியாது. எனவே முழுதும் அஹிம்சை மயமான சாதனங்களினால் நாம் சுயராஜ்யம் பெற்றுவிடுகையில் ஆட்சியையும் ராணுவத்தின் உதவியின்றி நடத்திக்கொண்டு போவதில் சிரமம் இருப்பதற்கில்லை. 'கூண்டாக்க'ளெனப்படும் முரட்டுத் தனமுள்ள துஷ்டர்களும் அப்போது நமக்கு அடங்கி வந்து விடுவார் கள். உதாரணமாக, சேவாகிராமத்தில் வாழும் 700 அஹிம்சாவாதிகளிடையே 5 அல்லது 7 கூண்டாக்கள் இருப்பார்களானால் இந்த 5 அல்லது 7 பேரும் மற்றவர்களின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டிருப்பார்கள். முடியாவிட்டால் அங்கிருந்து வெளியேறி விடுவார்கள்.

உங்கள் கேள்விக்கு நான் மிகுந்த எச்சரிக்கையுடன் பதில் சொல்லி வருவதை நீங்கள் பார்ப்பீர்கள். இதற்குக் காரணம் நான் வழிபடும் சத்தியம் நாம் போலீஸ் படையை வைத்திருக்கத்தான் வேண்டியிருக்கும் என்பதை ஒப்பச் செய்வது தான். ஆனால் நம் போலீஸ் பிரிட்டிஷாரின் போலீசைப் போலிராமல் நமக்கே உரிய முறையில் உருவாக்கப்பட்டிருக்கும். வயது வந்தவர்களுக்கெல்லாம் இங்கே ஓட்டுரிமை அளிக்கப்பட்டிருப்பதால் நம்மிடையே மிகவும் குறைந்த வயதுள்ளவர் சொல்லுக்கும் மதிப்பளிக்கப்படும். இதனாலேயே லட்சிய ரீதியில் அமைந்த அஹிம்சா ராஜ்யம் ஒழுங்காக நடக்கும் அராஜகமாயிருக்குமென்று சொல்லியிருக்கிறேன். எந்த ராஜ்யத்தில் ஆட்சி மிகவும் குறைவாய் இருக்கிறதோ அதுவே சிறந்தது. இதில் வருத்தத்திற்குரிய விஷயம், என் கையில் அதிகாரத்தைக் கொடுத்துப் பார்க்க எவரும் சித்தமாயிராதது தான். எனக்கு அதிகாரம் தரப்பட்டால் அஹிம்சா ரீதியில் ஆட்சி நடத்துவது எப்படியென்று காட்டுவேன். நான் போலீசுப் படையொன்றை வைத்திருந்தால் அது சீர்திருத்தவாதிகளைக் கொண்ட படையாகத் தான் இருக்கும்.

கேள்வி : அந்நியர் படையெடுப்பு நிகழ்ந்தால் அதை நீங்கள் எப்படி

அஹிம்சை முறையில் எதிர்த்து நிற்பீர்கள் என்பது எங்களுக்குப் புரியவில்லை.

பதில் : இவ்வகையில் நமக்கு ஏற்கனவே அனுபவம் எதுவும் இல்லாமையாலும், இப்போது அத்தகைய படையெடுப்பு எதுவும் நடக்கவில்லை யாகையாலும், நான் என்னென்ன செய்வேன் என்பதை உங்களுக்குச் சொல்ல முடியவில்லை. இப்போது நம்மிடம் சீக்கிய பட்டாணி, கூர்க்க வீரர்களைக் கொண்ட அரசாங்க ராணுவம் இருக்கிறது. நான் செய்யலாமென்று நினைப்பது, உத்தேசமாக 2000 அஹிம்சை வீரர்களைக் கொண்ட எனது படையுடன் நான் இருதரப்புக்களுக்கிடையே போய் நிற்பேன். ஆனால் இது சரியான விடையா காது என்று நான் அறிவேன். எதிரியின் பலாத்காரத்தையும் கொடுமையையும் இவ்வகையில் நம்மால் வெகுவாகக் குறைக்க முடியும் என்று மட்டுமே நான் சொல்வேன். அஹிம்சைப் படையின் தலைவன் சாதாரணப் படையின் தலைவனை விட அதிக நிதானம் உள்ளவனாய், சிறிதும் பதற்றமில்லாமலிருக்க வேண்டும். அவ்வப்போது எழும் தேவைகளுக்கு ஏற்ப நடந்து கொள்ளும் அறிவை ஆண்டவன் அவனுக்கு அளித்து உதவுவார். - ஹரிஜன் 25.8.1940, பக்கம் 261-262

ராணுவத்தின் உதவியை நம்பி இருந்துவரும் ஜனநாயகம் மிகவும் மோசமானதாய்த்தான் இருக்கும். ராணுவ சக்தி மனம் இயல்பாக வளர்வதைத் தடுத்துவிடுகிறது. அது மனிதனின் ஆன்மாவை தலைதூக்காது அமுக்கி விடுகிறது. மிகவும் திறமை வாய்ந்த ராணுவத்தின் உதவியினால் அடக்கி ஆளுவோருக்கு எத்தனையோ ஆண்டுகளாக அடங்கியிருக்கும் இந்தியா, நீண்ட காலத்திற்கோ, குறுகிய காலத்திற்கோ, உள்நாட்டுப் போருக்கு ஆளாக வேண்டியிருக்குமென்றும், அந்த அனுபவம் நமக்கு இப்போது இருந்து வரும் ராணுவ மோகத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வந்து விடுமென்றும் எதிர்பார்க்கிறேன். எந்த சமுதாய அமைப்புக்கும் தேவையாயுள்ள கட்டுப்பாடும் ஒழுங்கும் ராணுவத்திற்கு அதை மற்றவர்களிடமிருந்து பிரித்து அளிக்கப்படுகையில் அவர்களை மிருகங்களாக ஆக்கி விடுகிறது சுதந்திர இந்தியாவிலும் இப்போது நடக்கும் ராணுவச் செலவு அப்படியே நீடித்துவருமானால் பட்டினி கிடந்து வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு உதவி எதுவும் அளிக்க முடியாமற் போகும்.

- ஹரிஜன் 9.6.1946, பக்கம் 169

**போலீஸ் :**

அஹிம்சை முறையில் நடக்கும் ராஜ்யத்திலும் போலீஸ் படை தேவைப்படலாம் என்பதை நான் ஒப்புக்கொண்டிருக்கிறேன். இவ்வாறு ஒப்புக்கொண்டிருப்பது என் அஹிம்சை அரை குறைவானதாய் இருப்பதனால் தான். ராணுவம் தேவையில்லையென்று சொல்வதைப் போல போலீஸ்

படையில்லாமலும் காரியங்கள் நடத்திக் கொண்டு போக முடியுமென்று சொல்ல எனக்குத் துணிவு வரவில்லை. போலீசே தேவையில்லாத ராஜ்யத்தை என்னால் கற்பனை செய்ய முடியும். அவ்வாறு கற்பனையும் செய்கிறேன். ஆனால் நடைமுறையில் அது சாத்தியமாகுமா, ஆகாதா என்பது வருங்காலத்தில் தான் தெரியும்.

ஆனால் நான் நினைக்கும் போலீஸ் படை இப்போது உள்ளதைப் போலில்லாமல், முற்றிலும் வேறாயிருக்கும். அதிலுள்ள ஒவ்வொரு போலீஸ்காரரும் அஹிம்சையில் நம்பிக்கை உள்ளவராயிருப்பார். அவர்கள் மக்களின் ஊழியர்களாயிருப்பார்களேயன்றி எஜமானர்களாயிரார். மக்கள் இயல்பாகவே அவர்களுக்கு எல்லா வகையிலும் உதவுவார்களாகையால் அவர்கள் இருவரும் ஒத்துழைத்து நாளுக்கு நாள் குறைந்து வரும் குழப்பங்களை சுலபமாக சமாளிப்பார்கள். போலீஸ் படையிடம் ஒரு சில ஆயுதங்களிருப்பினும் அவை உபயோகிக்கப்படவே மாட்டா. உபயோகிக்கப்பட்டாலும் அந்த சந்தர்ப்பங்கள் என்றோ, எப்பொழுதோ தான் வரும். உண்மையில் போலீஸ் காரர்கள் எல்லோரும் சீர்திருத்தம் செய்வோராக இருப்பர். அவர்களின் முக்கியமான வேலை திருடர்களையும், கொள்ளைக்காரர்களையும் கண்டு பிடித்து அடக்குவதோடு முடிந்துவிடும். அஹிம்சையில் நம்பிக்கையுள்ள பெரும்பான்மையோரின் செல்வாக்கு அதிகமாயிருக்குமாகையால் சமூகத்தின் முக்கியமான பகுதிகளெல்லாம் அவர்களுக்கு அடங்கி இருந்து விடும். இதனால் அஹிம்சை முறையில் நடக்கும் ராஜ்யத்தில் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்குமிடையில் போராட்டங்களும் வேலை நிறுத்தங்களும் நடப்பது வெகு குறைவாக, என்றேனும் நடப்பதாய்த்தான் இருக்கும். சாதிச்சண்டைகளுக்கும் சமூகப் பூசல்களுக்குமோ இடமே இராது.

- ஹரிஜன் 1,9,1940, பக்கம் 265

## 8. அதிகாரம் : அதன் நல்ல, தீய பிரயோகங்கள்

ஒருவர் கைக்கு அதிகாரம் வந்து விட்டால் அவருக்கு கண்ணும் தெரியாது. காதும் கேளாது. எதிரிலேயே இருக்கும் பொருள்களும் அவர்களுக்கு புலனாகாது. காதின் பக்கத்தில் போய் உரக்கக் கத்தினாலும் அது அவர்கள் காதில் விழாது. எனவே அதிகார போதை தலைக்கேறிவிட்ட அரசாங்கங்கள் என்னதான் செய்யாது என்று சொல்வதற்கில்லை. ஆகையால் நாட்டுப்பற்றுள்ளவர்கள் தம் உயிரை இழக்கவும், சிறையிலிடப்படவும், இது போன்ற பிறவற்றிற்கும் தயாராயிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது.

- யங் இந்தியா, 13.10.1921, பக்கம் 327

உண்மை உள்ளத்துடன் புரியப்பட்ட பணியின் விளைவாக பெறப்படும் அதிகாரம் நம்மை உயர்த்தும். சேவை செய்வதாகச் சொல்லி பெரும்பான்மை வாக்குகளினால் மட்டுமே பெறக்கூடிய அதிகாரம் ஒரு மாயை; கானல் நீர். ஆகையால் அதன் அருகிலேயே செல்லக்கூடாது. - யங் இந்தியா 11.9.1924 பக்கம் 301

அதிகாரம் என்பது இரு வகையினது. ஒன்று மக்களை அச்சுறுத்தி பெறப்படுவது. இன்னொன்று, அன்பு செலுத்துவதனால் வருவது. அச்சுறுத்தி, பயத்தினால் பெறப்படும் அதிகாரத்தைவிட அன்பின் விளைவாக வரும் அதிகாரம் ஆயிரம் மடங்கு உயர்ந்தது. அதிக ஆற்றல் வாய்ந்தது. நிலைத்திருப்பது.

- யங் இந்தியா 8.1.1925 பக்கம் 15

அதிகாரம் அனைவராலும் பகிர்ந்து கொள்ளப்படும் வரையில் ஜனநாயகம் சாத்தியமில்லை. ஆனால் ஜனநாயகம், கும்பலின் கைக்கு அதிகாரம் போய், அவரவர்க்குத் தோன்றியதையெல்லாம் செய்வதாய் ஆகிவிடக்கூடாது. உன் பிழைப்பைத் தேடிக்கொள்ள உனக்கு உதவும் ஒரு பறையனும், கூலி வேலை செய்பவனும் சுயராஜ்யத்தில் அவனவனுக்குள்ள பங்கைப் பெற வேண்டும். ஆனால் நீங்கள் அவர்களை அணுகி, அவர்கள் புளி மூட்டைகளைப் போல சிறு குடிசைகளில் அடைந்து கிடப்பதை நேரில் போய்ப் பார்த்து, அவர்கள் சுகத்துக்கங்களை அறிய வேண்டும். மக்களின் சமுதாயத்தில் உள்ள இந்தப் பகுதியை கவனித்துக் கொள்ளும் பொறுப்பு உங்களுடையது. அவர்களை வாழவைப்பதும் மடியச்செய்வதும் உங்கள் கையிலிருக்கிறது.

- யங் இந்தியா 1.12.1927 பக்கம் 404

அரசியல் அதிகாரம் என்பது தான் எல்லாம், அதனாலேயே எல்லாம் ஆகிவிடும் என்று நான் எண்ணவில்லை. வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் மேம்பாடுறுவதற்கு உதவக்கூடிய ஒரு சாதனமே அது. அரசியல் அதிகாரம் என்பதற்கு மக்களின் பிரதிநிதிகளைக் கொண்டு பொது வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதற்குள்ள சக்தியைப் பெற உதவும் சாதனம் என்பது பொருள். மக்களின் வாழ்க்கை மிகவும் ஒழுங்காகி, தன்னைத்தானே நடத்திக்கொள்ளும் ஆற்றல் பெற்று விடுகையில் பிரதிநிதித்துவமே தேவையில்லை. அப்போது இருந்து வரும் ஏற்பாட்டை விழிப்புள்ள, விஷயம் தெரிந்த அராஜகம் எனலாம். அந்த ராஜ்யத்தில் ஒவ்வொருவரும் தமக்குத் தாமே ராஜாவாக இருப்பார். ஒவ்வொருவரும் பிறர் எவருக்கும் எவ்வகையிலும் இடையூறு நேரா வண்ணம் தம் காரியங்களைச் செய்து கொண்டு போவார். எனவே இந்த லட்சிய நிலையில் அரசாங்கமே இராதாகையில் அரசியல் அதிகாரம் என்பதும் இராது. ஆனால் இந்த லட்சியம்

வாழ்க்கையில் என்றுமே எய்தப்படப்போவதில்லை. இதனாலேயே மிகவும் குறைவாக ஆட்சி செலுத்தும் அரசாங்கமே தலைசிறந்தது என்ற தோரோ என்ற (அமெரிக்கப்) பெரியாரின் மணிவாக்கு தோன்றிற்று. - யங் இந்தியா 2.7.1931 பக்கம் 162

இதற்கு மக்களின் கைக்கு அரசியல் அதிகாரம் வருகையில் மக்களின் சுதந்திரத்தில் அரசாங்கம் தலையிடுவது மிகவும் குறைந்து போகும் என்று அர்த்தம். இதையே வேறு வகையில் சொன்னால், அரசாங்கத்தின் தலையீடு அதிகமின்றி, தன் காரியங்களை ஒழுங்காகவும், அமைதியாகவும், நடத்திச் செல்லும் ராஜ்யம் உண்மையில் ஜனநாயக ராஜ்யம் ஆகும். இவ்வாறு இல்லாத இடத்தில் ஜனநாயகம் நடக்கிறது என்றால் பெயரளவுக்குத்தான் நடப்பாதாயிருக்கும்.

- ஹரிஜன் 11.1.1936 பக்கம் 382

அரசாங்கத்தின் அதிகாரம் அதிகமாவதைக் காண்கையில் எனக்கு மிகுந்த திகிலாகிவிடுகிறது. காரணம், வெளிப்பார்வைக்கு சுரண்டலைக் குறைப்பதனால் நன்மை செய்வதாகத் தோன்றினும் முன்னேற்றத்திற்கு மூலகாரணமாயுள்ள தனி மனிதனின் சுதந்திரத்தை அழிப்பதன் மூலம் அது பெரிய தீங்கு இழைப்பதுதான். அரசாங்கம் முதலாளித்துவத்தை பலாத்காரத்தின் மூலம் அமுக்கினால் அது தானே பலாத்காரச் சூழலில் சிக்கித்தவிக்குமாகையால் அதனால் என்றுமே அஹிம்சையை வளர்க்க முடியாது என்பது எனது அசைக்க முடியாத நம்பிக்கை.

அரசாங்கம் என்பது கட்டுப்பாட்டுடன் ஒரே இடத்தில் சேர்த்து வைக்கப்பட்ட பலாத்காரமேயன்றி வேறல்ல. தனி மனிதன் என்றால் அவனுக்கு மனச்சாட்சி, ஆன்மா என்று ஒன்று உண்டு. ஆனால் அரசாங்கம் உள்ளம் அற்ற யந்திரமாகையால் அதை தனக்கு முக்கிய ஆதாரமாயுள்ள பலாத்காரத்தை விடும்படி செய்ய முடியாது. இதனாலேயே நான் தர்மகர்த்தா தத்துவம் நல்லதென்று நினைக்கிறேன்.

என்னைக் கேட்டால் அரசாங்கத்தின் கையில் எல்லா அதிகாரங்களையும் கொணர்ந்து குவிப்பதைவிட தர்மகர்த்தா முறையை எங்கும் அமுலுக்குக் கொண்டுவருவது நல்லது என்பேன். ஏனெனில், என் அபிப்பிராயத்தில் அரசாங்கத்தின் பலாத்காரத்தைவிட நிலமாகவும் பணமாகவும் சொத்து வைத்திருக்கும் தனிமனிதர்களின் பலாத்காரத்தினால் விளையும் தீங்கு குறைவாய்த்தானிருக்கும். ஆயினும் வேறு வழியில்லையென்றால் அரசாங்க உடைமை கூடிய வரையில் குறைவாயிருப்பதை நான் ஆதரிப்பேன்.

என்னால் ஒப்புக்கொள்ள முடியாதது பலாத்காரத்தின்

அடிப்படையிலமைந்த நிறுவனமான அரசாங்கத்தைத்தான். மக்கள் தாமே அமைத்துக் கொள்ளும் நிறுவனங்கள் இருக்கத்தான் வேண்டும்.

- 'தி மாடர்ன் ரெவ்யூ' (ஆங்கி), அக். 1935, பக்கம் 412

மேலேயிருந்து சுமத்தப்பட்ட அதிகாரத்திற்கு போலீசின் உதவியும் ராணுவத்தின் ஆதரவும் எப்பொழுதும் தேவையாயிருக்க, உள்ளேயிருந்து, அதாவது மக்களிடமிருந்தே தோற்றுவிக்கப்பட்ட அதிகாரத்திற்கு அவைகளின் உதவி தேவையில்லை.

- ஹரிஜன் 4.9.1937 பக்கம் 233

## 9. ஜனநாயகத்தின் தனி மனித சுதந்திரம்

ஒவ்வொரு மனிதனும் பிறர் உயிருக்கோ, உடைமைக்கோ தீங்கு எதுவும் செய்யாதிருக்கும் வரையில் தன் இஷ்டம்போல் காரியங்கள் செய்ய முடிவதுதான் நடப்பது ஜனநாயகம் என்பதற்கு உண்மையான அறிகுறி. மக்களின் நன்னடத்தையை அடாபிடித்தனமாக ராணுவத்தையும் போலீசையும் கொண்டு ஒழுங்கு படுத்த முடியாது. பொது ஜன அபிப்ராயம் ஒன்றினால் தான் ஒரு சமூகத்தை ஒழுங்காகவும், கெடாமலும் இருக்கச் செய்ய முடியும்.

- யங் இந்தியா 1.12.1920, பக்கம் 4

நாம் ஒருவராயினும் பலராயிருப்பினும் சுயமரியாதையை விற்றோ, உறுதியாகக் கொண்டுள்ள நம்பிக்கைகளைத் தளர்த்தியோ சுதந்திரம் வாங்க மறுத்து விட வேண்டும். பெரியவர்கள் அபிப்பிராயத்தில் அவை மிகவும் அற்பமானவையாய் இருப்பினும், தாம் பிடித்த பிடியை விடாமல் மிகவும் உறுதியாயிருக்கும் சிறு குழந்தைகளையும் நான் பார்த்திருக்கிறேன்.

- யங் இந்தியா, 16.12.1921 பக்கம் 418

எந்த மாகாணங்கள் அல்லது ராஜ்யங்கள் சேர்ந்து ஒரு நாடு ஆகியிருக்கிறதோ அது அந்த மாகாணங்கள் முன்னேறாத போது முன்னேற முடியாது. இதையே தலைகீழாக மாற்றிச்சொன்னால் மனிதனும் அவன் எந்த நாட்டின் குடிமகனோ அது முன்னேறாத போது முன்னேறுவதற்கில்லை.

- யங் இந்தியா 26.3.1931, பக்கம் 50

அரசாங்கம் என்ற சிக்கலான யந்திரத்தின் நுணுக்கங்கள் பலருக்குப் புரிவதில்லை. ஒவ்வொரு குடிமகனும் வாய் திறவாமலே ஆயினும், ஐயத்திற்கு இடமில்லாத வகையில், அவனுக்கே தெரியாத எத்தனையோ விஷயங்களில், எத்தனையோ வகையாக அரசாங்கத்திற்கு உதவிவருகிறான். எனவே, ஒவ்வொரு குடிமகனும் அரசாங்கத்தின் ஒவ்வொரு நடவடிக்கைக்கும் பொறுப்பு ஏற்கவேண்டியவனாகிறான். அரசாங்கத்தின் நடவடிக்கைகள் பொறுக்கக்கூடிய

வையாய் இருக்கும் வரையில் அதற்கு ஆதரவளிப்பது மிகவும் சரியே. ஆனால் அது அவனுக்கும் தீங்கு விளைவித்து, நாட்டிற்கும் தீமை செய்யும் பொழுதோ ஆதரவை நிறுத்திக் கொள்வது அவன் கடமையாகி விடுகிறது.

- யங் இந்தியா 28.7.1920 பக்கம் 4

பெரும்பாலான சந்தர்ப்பங்களில் வழக்கமான நடைமுறையை அரசாங்கம் மீறுவதனால் தனக்கு சிரமம் நேர்ந்தாலும் ஜீவாதாரமான அம்சங்கள் பாதிக்கப்படாத போது அதைப்பொருட்படுத்தாமல் இருந்து விடுவது குடிமகனின் கடமை என்பது உண்மைதான். ஆனால் தாளமுடியாத கொடுமை இழைக்கப்படுகையில் அதை எதிர்த்து கிளம்புவதற்கு ஒவ்வொரு நாட்டிற்கும், அதிலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமையுண்டு. இது அவர்கள் கடமையுமாகும். ஆயுதங்களுடன் எதிர்த்துக் கிளம்புவதில் எனக்கு நம்பிக்கையில்லை. அதனால் எந்தத் தீங்கை எதிர்த்து கிளம்புகிறோமோ அதைவிட அதிகத் தீங்கே விளையும். அவ்வாறு கிளம்புவது சகிப்பின்மை, கோபம், பழிக்குப் பழி வாங்கும் எண்ணம் ஆகியவற்றையே குறிக்கும். பலாத்கார முறைகளினால் காலப்போக்கில் நன்மை எதுவுமே விளையாது. ஜெர்மனியை எதிர்த்து இங்கிலாந்தும் பிரான்ஸும் நடத்திய ஆயுதப் போரின் விளைவைத்தான் பாருங்களேன். ஜெர்மானியரைப் பற்றி இவர்கள் முன்பு நமக்கு என்னென்ன சொன்னார்களோ அதே போல இவர்கள் இப்போது ஆகிவிட வில்லையா?

- யங் இந்தியா, 9.6.1920, பக்கம் 3

தனி மனிதனைப் பொருட்படுத்த வேண்டியதில்லை என்றால் பிறகு சமூகம் எங்கே இருக்கும்? தனிமனிதனுக்கு சுதந்திரம் அளித்தால் தான் அவனை சமூகத்தின் ஊழியத்திற்கு தன்னை முழுதும் அர்ப்பணித்துகொள்ளுமாறு செய்ய முடியும். அந்த சுதந்திரம் பறிக்கப்படுகையில் அவன் ஓர் யந்திரம் போலாகி விடவும், சமூகமே அழிந்துப் போகிறது. தனி மனிதனுக்கு சுதந்திரத்தை மறுத்து விட்டு சமூகத்தை உருவாக்குவது சாத்தியமல்ல. அது மனிதனின் சுபாவத்திற்கே மாறானது. ஒரு மனிதனால் கொம்புகளும் வாலும் வளர்த்துக்கொண்டு மாடாக ஆக முடியாததைப் போல சொந்தத்தில் சிந்திக்கும் சக்தி இல்லாது போகையில் அவன் மனிதனாகவே இருக்க மாட்டான். உண்மையில் தனிமனித சுதந்திரத்தில் நம்பிக்கையில்லாதவர்களும் தனக்கு மட்டும் சுதந்திரம் வேண்டுமென்றே நினைப்பார்கள். செஞ்சிஸ்கானின் நவீன அவதாரங்களும் தம் சுதந்திரத்தை மட்டும் பத்திரமாய்ப் பாதுகாத்துக்கொள்கிறார்கள்.

- ஹரிஜன் 1.2.1942. பக்கம் 27

ஜனநாயகத்தில் தனி மனிதனின் அபிப்பிராயங்கள் சமூகத்தின் அபிப்பிராயத்தினால் ஒழுங்கு படுத்தப்படுகிறது; அது ஜனநாயகத்திற்காக,

ஜனநாயகத்தினாலேயே அடக்கியாளப்படுகிறது. ஒவ்வொரு மனிதனும் தன் மனம் போல் நடக்கையில் அரசாங்கமே இல்லாது போய் அராஜகம் வந்து விடுகிறது; அதாவது சட்ட திட்டங்களும் அரசாங்கமும் இல்லாது போகின்றன. இவ்வாறாகையில் சுதந்திரமே பறிபோய் விடும். ஆகையால் அவர்கள் தம் கோபத்தை அடக்கிக் கொண்டு, அரசாங்கத்தையே நியாயம் வழங்கச் செய்ய வேண்டும். - "தில்லி டயரி" (ஆங்கிலம்), பக்கம் 18, பதிப்பு 1948

ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நாம் ஒவ்வொருவரும் தாம் வைத்ததே சட்டம் என்று எல்லாம் செய்து கொண்டு, வரவிருக்கும் தேசீய சபையின் ஒவ்வொரு நடவடிக்கையையும் தோண்டித் துராவிப் பார்த்து எடை போடுவதென்றால் அது எனக்கு மிகுந்த வருத்தமளிக்கும். நான் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கையில் மிகுந்த கவனம் செலுத்தி, என் சொந்த அபிப்பிராயங்களை ஒரு புறம் கட்டி வைத்து விட்டு, பெரும்பாலான விஷயங்களில் நாட்டின் பிரதிநிதிகளின் முடிவை ஏற்றுக்கொள்வேன். இவ்வாறு செய்தாலல்லது ஒரு நாளைக்குக்கூட ஜனநாயக அரசாங்கத்தினால் நிலைக்க முடியாது. - யங் இந்தியா, 17.11.1921, பக்கம் 367

தனி மனிதனின் சுதந்திரத்திற்கு நான் மதிப்பு அளித்த போதிலும் மனிதன் என்பவன் பலரோடு சேர்ந்து வாழ்ந்தே பழகியவன் என்பதை நீங்கள் மறக்கக் கூடாது. தன் சொந்த விருப்பு வெறுப்புக்களை சமுதாயத்தின் முன்னேற்றத்திற்குத் தேவையான வகையில் அடக்கவும், விட்டுக் கொடுக்கவும் தெரிந்துகொண்டதனாலேயே அவன் இப்போதுள்ள அந்தஸ்துக்கு வளர்ந்திருக்கிறான். கட்டுக் கடங்காத சுதந்திரம் காட்டில் உள்ள சிங்கம் புலிகளுக்குத் தானுண்டு. நாம் தனி மனித சுதந்திரத்திற்கும் சமூகக் கட்டுப்பாட்டிற்குமிடையில் ஒரு வழியை வகுத்துக் கொண்டு அதிலேயே செல்லத்தெரிந்து கொண்டிருக்கிறோம். நாமாக சமூகக் கட்டுப்பாடுகளுக்கு, அதன் நலனைக் கருதி அடங்கியிருப்பதனால் நமக்கும், நம்மைப் போன்றவர்களைக் கொண்டு அமைந்த சமூகத்திற்கும் நன்மை விளைகிறது.

- ஹரிஜன், 27.5.1939, பக்கம் 144

சமூக வாழ்க்கைக்கு தனி மனிதர்களுக்கு சுதந்திரம் இருப்பதும், அவர் கள் ஒருவரையொருவர் சார்ந்து, ஒருவர் மற்றவருக்கு உதவிக்கொண்டு இருப்பதும் அவசியம் தான். மக்கள் வாடையே இல்லாத தீவில் போய் வாழ்ந்த **ராபின்சன் குருஸோ**வுக்குத் தான் பிறர் உதவியின்றி வாழ்வது சாத்தியம். ஒவ்வொருவரும் தனது முக்கியமான தேவைகளை தானே பாடுபட்டுத் தேடிக்கொண்டு, எஞ்சியவைகளை அண்டை அயலில் உள்ளவர்களின் உதவியினால் பெறப் பார்க்க வேண்டும். உண்மையான கூட்டுறவு என்பது இது தான்.

- ஹரிஜன், 31.3.1946, பக்கம் 59

## 10. கருத்துச் சுதந்திரம்

பொது ஜன அபிப்பிராயம் ஒன்றினால்தான் சமூகத்தை தூய்மையாகவும் ஆரோக்கியமாகவும் வைத்திருக்க முடியும். - யங் இந்தியா, 1.12.1920, பக்கம் 4

நாம் உண்மையான ஜனநாயக மனோபாவத்தை வளர்த்துக்கொள்ள விரும்பினால், சகிப்புத் தன்மை இல்லாதிருக்கக் கூடாது. சகிப்பின்மை நமக்கு நம் கட்சியிலேயே நம்பிக்கையில்லாததைத் தான் காட்டும்.

- யங் இந்தியா, 2.2.1921, பக்கம் 3

பேச்சு சுதந்திரம் என்பதற்கு ஒருவர் பேச்சினால் மனம் புண்ணானாலும் அதைத் தடுக்காது விடுவது என்றுதான் அர்த்தம். பத்திரிக்கைகள் மிகவும் காரசாரமாக கருத்துக்களை வெளியிடுவதோடு நில்லாமல், விஷயங்களைத் திரித்துக் கூறவும் விடப்படும்போது தான் அவைகளுக்கு சுதந்திரம் இருக்கிறது என்று ஆகும். திரித்துக் கூறுவதையும், பலாத்காரத்திற்குத் தூண்டுவதையும் தடுப்பதற்காக அவைகளுக்கு வாய்ப்பூட்டு போடவோ, அச்சகங்களையே மூடிவிடவோ செய்யாமல் பிரஸ்தாப கட்டுரைகளை எழுதியவரை தண்டிப்பதோடு நிறுத்திக்கொண்டு, அச்சகத்தை ஒன்றும் செய்யாமலிருந்து விட வேண்டும். மக்கள் கூட்டங்களில் கூடி புரட்சிகரமான திட்டங்களைப்பற்றி விவாதிப்பதற்கும் அனுமதிக்கப்படும் போது தான் கூட்டம் கூடும் சுதந்திரம் உண்மையில் மதிக்கப்பட்டதாகும். அரசாங்கம் பொதுஜன அபிப்பிராயத்தையும் சாதாரண போலீசாரையும் நம்பியிருக்க வேண்டுமே தவிர, தன் மிருகத்தன்மையுள்ள ராணுவத்தைக் கொண்டு பொதுஜன அபிப்பிராயத்தையும் அதன் பிரதிநிதியான அரசாங்கத்தையும் குழப்பும் கருத்துடன் நடக்கும் புரட்சியை அடக்கக்கூடாது.

- யங் இந்தியா, 12.1.1922, பக்கம் 29

எந்த வகைக் கருத்தினரும், சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களும் தாங்கள் சொல்வதே சரி என்று பிடிவாதம் பிடிக்கக்கூடாதென்று நான் திரும்பத் திரும்ப சொல்லியிருக்கிறேன். நாம் எல்லோருமே பிழைகள் செய்யக் கூடியவர்களாகையால் நம் கருத்துக்களை அடிக்கடி மாற்றிக் கொள்ள வேண்டி வருகிறது. இதைப் போன்ற பெரிய நாட்டில் உண்மையாகவும் நாணயமாகவும் கருத்துக்கள் கொண்டுள்ள எல்லோருக்கும் இடம் இருக்க வேண்டும். ஆகவே குறைந்த பட்சம் நம் விஷயத்திலும் பிறர் விஷயத்திலும் நாம் செய்ய வேண்டுவது. எதிராளியின் கருத்தைப் புரிந்து கொள்வதும் அதை ஏற்க முடியாவிட்டாலும், நம் கருத்தை பிறர் மதிக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்ப்பதைப் போலவே பிறர் கருத்தை நாம் மதிப்பதுமாகும். செம்மையான பொது வாழ்வுக்கு இன்றியமையாத சாதனங்களில் இது ஒன்றாகையால் சுயராஜ்யத்திற்கு நமக்குள்ள தகுதியையும்

இதுவே காட்டும். நாம் தாராள புத்தியும் சகிப்புத் தன்மையும் இல்லாதிருந்தால் நம்மால் நம்மிடையே எழும் தகராறுகளை சுமூகமாகத் தீர்த்துக் கொள்ள முடியாதாகையால் எப்பொழுதும் மூன்றாம் மனிதன் தீர்ப்புக்கு, அதாவது அந்நியர் ஆதிக்கத்திற்கு அடங்கியே இருக்க வேண்டியிருக்கும்.

- யங் இந்தியா, 17.4.1924, பக்கம் 130

செம்மையான பொதுஜன அபிப்பிராயத்திற்கு எவ்வளவு சக்தி உண்டு என்பதை நாம் இன்னும் முழுதும் புரிந்து கொள்ளவில்லை. பொதுஜன அபிப்பிராயம் பலாத்காரத்தில் இறங்கி அதை எல்லோரும் ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும் என்று வற்புறுத்துகையில் அது சகிக்க முடியாததாக ஆகிவிடுகிறது.

- யங் இந்தியா, 7.5.1931, பக்கம் 103

மக்கள் பிரதிநிதிகளைக் கொண்டு நடக்கும் ஆட்சி பொதுஜன அபிப்பிராயத்தை மதியாமல், அதைத் தன் இஷ்டத்திற்குத் திருப்பும் கருத்துடன் எதையும் செய்யக்கூடாது. பொதுஜன அபிப்பிராயத்தை மீறி நடக்குமானால் அதுவே அழிவுற்றுவிடும். கட்டுப்பாட்டுடனும் அறிவுடனும் நடக்கும் ஜனநாயகத்திற்கு ஈடானது உலகில் எதுவும் இல்லை. பாரபட்சம் உள்ளதும், அறிவில்லாததும், குருட்டு நம்பிக்கைகள் கொண்டதுமான ஜனநாயகம் குழப்பத்தில் சிக்கி அவதிப்படுவதோடு, இறுதியில் அழிந்தும் போகும்.

- ஹரிஜன், 30.7.1931, பக்கம் 199

நாம் எதிராளி சொல்வதையும் காதில் வாங்கிக் கொள்ள சித்தமாயில்லாவிட்டால் ஜனநாயகம் வளர்ந்து பருவம் எய்துவதே சாத்தியமல்ல. நாம் எதிராளி சொல்வதைக் கேட்க மறுக்கையிலும், கேட்டாலும் அவர்கள் சொல்வதைக் கேலி செய்கையிலும் நம் நடவடிக்கைகளில் நியாயம் புகாது தடுக்கிறோம். எதிராளியின் பேச்சை சகிக்காமலே, பொறுக்காமலே பழகி விடுகையில் நம்மால் உண்மையை அறிய முடியாமற் போகும். இயற்கையில் நமக்குள்ள அறிவாற்றலின் துணையால் செயல் படுகையில் நமக்கு சரியென்று தோன்றுவதை அஞ்சாமல் சொல்லவும், செய்யவும் துணியவேண்டும். ஆனால் நாம் உண்மையென்று நம்பியிருந்தது அவ்வாறில்லை என்று தெரிந்ததும் நம் கருத்தை மாற்றிக் கொள்ளவும், முன்பு நினைத்தது தவறு என்று தயங்காது ஒப்புக்கொள்ளவும் வேண்டும். இவ்வாறு செய்வதனால் நம்மிடமுள்ள உண்மை மேலும் உறுதியாவதோடு, அதிலிருந்த குறைகளும் நீக்கப்பெறும்.

- ஹரிஜன், 31.5.1942, பக்கம் 172

பலவீனர்கள், சக்தியில்லாதவர்கள் ஆகியோரின் போலி அஹிம்சையைப் போல் தீங்கு விளைவிக்கக் கூடியது வேறு இல்லை. நம்முள் தேவையான அஹிம்சை மட்டுமிருந்தால் நம் பொது வாழ்வில் மிகவும் அதிகமாக

சகிப்புத்தன்மை காணப்படும். அப்போது நாட்டில் எவ்வளவு விதமான அபிப்பிராயங்களுள்ளனவோ அவ்வளவு கட்சிகள் தோன்றுவதற்கும் இடமிருக்கும். கருத்து வேற்றுமைகளிலிருந்து மக்களின் போற்றத்தக்க சுதந்திர மனப்பான்மை வெளியாகுமே தவிர, கட்சி பூசல்களுக்கும் திரிசமன்களுக்கும் இடம் ஏற்படாது. சுதந்திர மனப்பான்மை வாழ்க்கையின் ஒரு நியதியாகையால் கட்சிப்பூசல்களும் சூழ்ச்சிகளும் உள்ள இடத்தில் அதற்கு இடமில்லை. - ஹரிஜன், 6.10.1946, பக்கம் 338

பொதுஜன அபிப்பிராயம் உருவாக்கப்படாதிருக்கையிலேயே சட்டங்களை நிறைவேற்றுவதனால் ஒரு நன்மையும் இல்லை. பொதுஜன அபிப்பிராயத்தை விரைவில் தோற்றுவிப்பதற்கு உள்ள வழி ஒத்துழையாமை ஒன்றே. - யங் இந்தியா, 29.6.1921, பக்கம் 208

சுதந்திரமான ராஜ்யத்தில் நிறைவேற்றப்படும் சட்டங்கள் எப்பொழுதும் மக்களில் பெரும்பாலோரின் கருத்தைப் பிரதிபலிப்பவையாயிருக்கும். பொது ஜன அபிப்பிராயம் உருவாகாதிருக்கையில் சட்டம் நிறைவேற்றுவது தலைவர்களுக்கு மக்கள் தொண்டில் ஈடுபாடு இல்லாததையே காட்டும். இதனால் எப்பொழுதும் மக்கள் தொண்டை நம்பித்தான் நான் எந்த நடவடிக்கையும் எடுத்திருக்கிறேன்.

- "மாபெரும் உபவாசம்" (ஆங்கிலம்) பக். 166, பதி. 1932

## 11. கட்டுப்பாட்டின் அவசியம்

பரிபூரண சுதந்திரம் நிலவும் இடத்தில் மிகவும் அதிக அளவில் கட்டுப்பாடும் பணிவும் இருந்தாக வேண்டும். கட்டுப்பாடு, பணிவு ஆகியவற்றின் விளைவாகப் பெறப்படும் சுதந்திரத்தை எவராலும் மறுக்க முடியாது. கட்டுப்பாட்டிற்கு அடங்காமல் தான் தோன்றித்தனமாய் நடந்து கொள்வது அநாகரிகத்தின் அறிகுறியே. அதில் ஈடுபடுவோருக்கும் அவர்கள் பக்கத்திலிருப்போருக்கும் கேடே விளையும். - யங் இந்தியா, 3.6.1926, பக்கம் 203

பிறவியிலேயே, ஒருவர் ஜனநாயக வாதியாய் இருந்தால் அவர் கட்டுப்பாட்டிற்கடங்கி நடப்பவராகவுமிருப்பார். மனிதன் இயற்றியவையும் தெய்வம் விதித்திருப்பவையுமான சட்டங்களுக்கு சாதாரணமாக முழுமனதுடன் அடங்கி நடந்து பழகியவனுக்கு ஜனநாயக முறையில் நடந்து கொள்வதில் ஒரு சிரமமும் இராது. ஜனநாயகத்தில் பங்கு கொண்டு அதை நடத்தும் ஆசையுள்ளவர்கள் முதலில் இந்தப் பரீட்சையில் தேறி, அதற்கு வேண்டிய தகுதி பெறட்டும். மேலும், ஒருவர் ஜனநாயக வாதியென்றால் அவர் சிறிதும் சுயநலமில்லாதவராயிருக்க வேண்டும். அவர் விழித்திருக்கையிலும்; உறங்குகையிலும் தன்னைப்பற்றியும் தன் கட்சியைப் பற்றியுமன்றி ஜனநாயகத்தைப் பற்றியே சிந்திக்கவும் கனவு காணவும்

வேண்டும். அதன் பிறகுதான் சாத்துவிகச் சட்டமறுப்புச் செய்ய அவருக்கு தகுதி உண்டாகும். நான் எவரையும் தனது முடிவான கருத்தைவிடவோ, தன்னை அடக்கிக் கொள்ளவோ சொல்லவில்லை. செம்மையும் நாணயமும் உள்ள கருத்து வேற்றுமைகளினால் நம் காரியத்திற்கு தீங்கு எதுவும் நேருமென்று நான் நினைக்க வில்லை. ஆனால் சமயத்திற்கு ஏற்ப மாறுவதும், ஒன்றை மற்றொன்றாக மாற்றிக் காண்பிப்பதும், கொள்கைகளை அசட்டை செய்துவிட்டு சமாதானம் செய்து கொள்வதும் நம் காரியத்தை நிச்சயமாய்க் கெடுத்துவிடும். உங்களால் ஒத்துப்போக முடியவில்லையென்றால், உங்களுடைய அந்தரங்கமான அபிப்பிராயத்தை கட்சியின் சௌகரியத்திற்கான வெறும் கோஷமாக அன்றி, உங்களின் அந்தரங்கமான முடிவாக வெளியிடத் தவறக்கூடாது.

இன்று நமது ஜனநாயகம் நமக்குள் நடக்கும் பூசல்களினால் மூச்சு முட்டிப் போகும் நிலையில் இருக்கிறது. நாம் ஹிந்துக்களுக்கும் முஸல்மான்களுக்கும், பிராம்மணர்களுக்கும் பிராம்மணரல்லாதவருக்கும், காங்கிரஸ்காரர்களுக்குள்ளேயே ஒருவருக்கும் இன்னொருவருக்கும் ஆகாமையினால் பிரிந்து, சிதறுண்டிருக்கிறோம். இந்த சந்தைக் கூட்டத்தில் நடக்கும் அடிபிடி போன்ற நிலையில் ஜனநாயகத்தை உருவாக்குவது அவ்வளவு சுலபமல்ல. இவை போதாவென்று சாதிப்பிரிவினை என்ற நோய்க்கிருமிகளையும் கட்சிப்பற்றையும் வேறு புகுத்தி, ஏற்கனவே உள்ள குழப்பத்தை மேலும் மோசமாக்காது இருப்போம். - ஹரிஜன், 27.5.1939, பக்கம் 136

எந்த நிறுவனத்தினாலும், அதன் அங்கத்தினர்கள், அதிலும் முக்கிய மாக அதன் நிர்வாகிகள் அதன் நோக்கங்களை நிறைவேற்ற மறுத்துக் கொண்டும், எதிர்ப்பைப் பொருட்படுத்தாது பதவியில் ஒட்டிக்கொண்டுமிருக்கையில், வெற்றிகரமாய் நடக்க முடியாது. - யங் இந்தியா, 28.8.1924, பக்-285

கலப்படமில்லாத அஹிம்சை முறையில் முயன்று, 40 கோடி மக்கள் சுதந்திரம் பெறவேண்டுமானால் அது பிறருக்கு அஞ்சியில்லாமல் தாமே மிகவும் கடுமையான கட்டுப்பாட்டிற்கு இயல்பாக அடங்கி நடந்தாலல்லாது சாத்தியமில்லை. தேவையான கட்டுப்பாடில்லாதபோது அஹிம்சை வெறும் மேல் பூச்சாகத்தானிருக்கும். - "தி ஹிந்துஸ்தான் ஸ்டான்டர்டு" (ஆங்கிலம்) 6.8.1944

## 12. கருவியும் குறிக்கோளும்

சாதனத்திற்கும் சாத்தியத்திற்கும், கருவிக்கும் குறிக்கோளுக்கும் சம்பந்தமில்லை என்று எண்ணுவது பெரிய தவறாகும். இந்தத் தவறு காரணமாக மிகுந்த மதப் பற்றுள்ளவர்கள் என்று கருதப்பட்டவர்களும் மன்னிக்க முடியாத தவறுகள் செய்திருக்கிறார்கள். சாதனத்தை வித்துடனும் சாத்தியத்தை அதிலிருந்து

தோன்றும் மரத்துடனும் ஒப்பிடலாம். வித்துக்கும் மரத்திற்குமுள்ள மாற்ற முடியாத அதே சம்பந்தம் சாதனத்திற்கும் சாத்தியத்திற்குமிடையே உண்டு.

- "இந்திய சுயராஜ்யம்" (ஆங்கிலம்), பக்கம் 71, பதிப்பு 1958

பலர் சாதனம் அப்படி ஒன்றும் முக்கியமானதல்ல என்கிறார்கள். நான் சாதனமே மிகவும் முக்கியம் என்கிறேன். சாதனத்திற்கு ஏற்பதான் சாத்தியம் அமையும். சாதனத்திற்கும் சாத்தியத்திற்குமிடையில் ஒன்றை மற்றதனிடமிருந்து பிரிக்கும் சுவர் எதுவும் கிடையாது. உண்மையில் உலகையும் நம்மையும் படைத்த கடவுள் ஓரளவுக்கு சாதனத்தை மட்டும் நம் வசத்தில் விட்டு அதன், விளைவான சாத்தியத்தை தம்மிடமேதான் வைத்துக் கொண்டிருக்கிறார். சாதனத்தை நாம் எந்த அளவுக்கு சரியாகப் பயன்படுத்துகிறோமோ அதே அளவுக்குத்தான் சாத்தியமும் நமக்குக் கிட்டும். இது சிறிதும் விலக்குக்கு இடமில்லாத முடிவான சித்தாந்தமாகும்.

- யங் இந்தியா, 17.7.1924, பக்கம் 236

மிகவும் உயர்ந்த காரியத்தை சாதிப்பதற்கும் பலாத்கார முறைகளைக் கையாள்வதை நான் மிகவும் கடுமையாக எதிர்ப்பவன். நீடித்த நன்மை விளைய வேண்டுமென்றால் அது பலாத்காரத்திலிருந்தும் பொய்யிலிருந்தும் ஒருபொழுதும் விளையாது என்று நான் அனுபவத்திலிருந்து, ஐயத்திற்கிடமில்லாமல் தெரிந்து கொண்டிருக்கிறேன்.

- யங் இந்தியா, 11.12.1924, பக்கம் 406

சாதனம் என்றால் அது எப்பொழுதும் நமக்கு சுலபமானதாய் இருக்க வேண்டும்.... நாம் சாதனத்தை மட்டும் கவனித்துக் கொண்டால் விரைவிலோ சிறிது காலம் தாழ்த்தியோ லட்சியம் கைகூடுவது உறுதி.

- "எரவாடா மந்திர்" (ஆங்கிலம்) பக்கம் 9, பதிப்பு 1945

இலட்சியத்தை ஒருவர் எவ்வளவு தெளிவாக விளக்கி, நாமும் மிகவும் நன்றாய்ப் புரிந்து கொண்டிருந்த போதிலும் நமக்கு அதில் போய்ச் சேருவதற்குள்ள வழியும் தெரிந்திருந்தாலல்லாது ஒரு நன்மையும் இல்லை. இதனாலேயே நான் சாதனத்தில் முழுக்கவனம் செலுத்தி அதை மேன்மேலும் நன்கு உபயோகிப்பதிலேயே கருத்துக் கொண்டிருந்திருக்கிறேன். நாம் சாதனங்களை மட்டும் கவனித்துக் கொண்டால் லட்சியத்தில் போய் சேருவதற்கு ஒரு தடையுமிராது என்று நான் அறிவேன். மேலும், நாம் இலட்சியத்தை நோக்கி முன்னேறுவது, நாம் கையாளும் சாதனத்தைப் பொறுத்தது என்று உணருகிறேன். ... இந்த முறை நீண்டதாய், மிகவும் நீண்டதாய்க் கூடத் தோன்றலாம், ஆனால் அதுதான் வெகுவிரைவில் நம்மை இலட்சியத்தில் கொண்டு சேர்க்கக்கூடியது என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

- "அமிருத பஜார் பத்திரிகா" (ஆங்கிலம்), 17.9.1933

## 13. ஜனநாயகத்தில் உரிமைகளும் கடமைகளும்

உரிமைகள் உண்மையில் வருவது கடமையிலிருந்துதான். நாம் எல்லோரும் நம் கடமைகளைச் சரியாக நிறைவேற்றினால் உரிமைகளைப் பெறப்பாடுபட வேண்டியதில்லை. நாம் நம் கடமைகளைச் செய்யாமல் உரிமைகளைத்தேடி அலைகையில் அவை நம் கையில் சிக்காமல் நம்மை ஏமாற்றி விட்டுப் போய்விடுகின்றன. நாம் அவைகளின் பின்னே ஓட ஓட அவை மேலும் வேகமாகப் பறந்து கொண்டிருக்கின்றன. இதே உண்மைதான் கிருஷ்ணபகவானின் - என்றும் உண்மையான "நீ புரிய வேண்டியது செயல் ஒன்றே. அதன் பயனுக்கும் உனக்கும் சம்பந்தம் இல்லை" என்ற சொற்களில் அடங்கியிருக்கிறது. இதில் செயல் என்பது கடமையையும், அதன் விளைவான பயன் உரிமையையும் குறிக்கும்.

- யங் இந்தியா, 8.1.1925, பக்கம் 15-16

உரிமைகளைப் பற்றியே எண்ணிக்கொண்டிருந்த எந்த மக்களும் முன்னேறியதில்லை; கடமைகளில் கருத்தாயிருந்தவர்களே மேன்மையுற்றிருக்கிறார்கள். கடமைகளைச் செய்கையில் அதிலிருந்தே உரிமைகள் கிடைத்து விடுகின்றன. தம் கடமைகளை உணர்ந்து அவற்றைச் செய்பவர்கள் இயல்பாகவே உரிமைகளைப் பெறுகிறார்கள். சாத்திரங்கள் பெற்றோரை வணங்கிப்போற்றுமாறு போதிக்கின்றன. அதற்கு நாம் நம் பெற்றோர்களுக்கு சிறிதும் தயங்காது கீழ்ப்படிந்து நடக்கவேண்டும் என்பது பொருள், நாம் இவ்வாறு முழு மனதுடன் கீழ்ப்படிவதற்குக் காரணமென்ன? பூதாகரமாய் உள்ள ஷௌகத் அலியை அவர் தாய் சிறிது கடுமையாய் நோக்கியவுடன் அவர் பெட்டிப்பாம்பாய் அடங்கிப்போவதை நாம் அறிவோம். இவ்வாறு அவர் மனப்பூர்வமாய் தம் தாய்க்குப் பணிந்து போவதன் இரகசியம் என்ன? அது அவ்வாறு பணிந்து நடந்தால் தான் தமக்கு தாயின் வாரிசாகும் உரிமை கிடைக்கும் என்ற உணர்வுதான். ஒருவர் இன்னொருவருக்குப் பணிந்து நடக்கிறாரென்றால் அவருக்கு அதனால் ஏதோ நன்மை உண்டாக விருக்கிறது என்றுதான் அர்த்தம், இவ்வாறு இருந்தும் தனக்கு தன் பெற்றோரின் சொத்துக்கள் கிடைக்கும் என்ற எண்ணத்தினால் அவர்களுக்குப் பணிந்து நடக்கும் பிள்ளையைப் போற்றுவதற்கில்லை. இதனால் சாத்திரங்களே பயனிடம் கருத்தின்றி பெற்றோருக்கும் பெரியோருக்கும் பணிந்து நடக்குமாறு போதிக்கின்றன. உரிமையைப்பற்றி எண்ணாதவனுக்கு அது தானே கிடைக்க அதைப் பற்றியே எண்ணிக் கொண்டிருப்பவன் அதை இழந்து விடுகிறான். நான் உங்களுக்கு அளிக்க விரும்பும் நல்லுரை இது தான்.

- யங் இந்தியா, 15.1.1925, பக்கம் 18

புள்ளினங்களுக்கும் விலங்குகளுக்கும் இருப்பதைப் போல ஒவ்வொரு மனிதனுக்கும் தன் வாழ்க்கையின் தேவைகளைப் பெறுவதற்கு உரிமையுண்டு. ஒவ்வொரு உரிமையும் அதோடு இணைந்த கடமையைச் செய்யும் பொழுதே கிடைக்குமாகையால் அது நமக்குக் கிடைக்காமல் செய்யப்படுகையில் அதோடு இணைந்த கடமைகளைத் தெரிந்து கொண்டு, அதைப் பெறுவதற்கு நமக்குள்ள ஜீவாதார உரிமையை வற்புறுத்தத் தேவையான நடவடிக்கை எடுத்தால் போதும். இணைந்த கடமை என்பது என் கைகளினால் உழைத்துப் பாடுபடுவதும், அதற்கான நடவடிக்கை என்பது என் உழைப்பின் பயனை எனக்குக் கிடைக்காமல் செய்பவனோடு நான் ஒத்துழைக்க மறுப்பதுமாகும். - யங் இந்தியா, 26.3.1931, பக்கம் 49

அஹிம்சையினடிப்படையிலமைந்த சுயராஜ்யத்தில் மக்களுக்கு தம் உரிமைகள் தெரிந்திருக்க வேண்டியதில்லையாயினும் அவர்கள் தம் கடமைகளை அறிந்திருக்க வேண்டும். நாம் ஒரு கடமையைச் செய்தோமென்றால் அதன் விளைவாக நமக்கு உரிமையொன்று வராதிராது. நம் கடமைகளைச் சரிவரச் செய்ததன் பயனாக நமக்குக் கிடைக்கும் உரிமைகளே உண்மையானவை. ஆகையால் குடிமக்களுக்குள்ள உண்மையான உரிமைகள் தம் நாட்டிற்கு ஊழியம் செய்பவர்களுக்குத்தான் கிடைக்கும். இவ்வாறு இயல்பாகப் பெறப்படும் உரிமைகளைத்தான் அவர்களால் ஆண்டு அனுபவிக்க முடியும். ஒவ்வொருவருக்கும் பொய் பேசவும் அடாப்பிடித்தனம் செய்யவும் உரிமையுண்டு. ஆனால் இவைகளைச் செய்வதனால் செய்வோருக்கும் சமூகத்திற்கும் தீங்கே விளையும். ஆனால் உண்மையினின்று வழுவாமலும், பலாத்காரத்தில் இறங்காமலும் இருப்பவரை சிறப்பும் பெருமையும் தேடிவரும். அவைகளிலிருந்து அவர்கள் உரிமைகளும் பெறுவார்கள். தம் கடமைகளைச் செய்ததனால் உரிமைகள் பெற்றவர்கள் அவ்வுரிமைகளை சமூகத்தின் நலனுக்காக அன்றி சொந்த நலனுக்குப் பயன்படுத்தமாட்டார்கள். ஒரு நாட்டு மக்கள் சுயராஜ்யம் அனுபவிக்கிறார்களென்றால் அதில் வாழும் ஒவ்வொருவரும் தம்மை அடக்கியாளுகிறார்கள் என்றே அர்த்தம். அத்தகைய சுயராஜ்யம் ஒவ்வொரு மனிதனும் நாட்டின் குடிமகனுக்குள்ள கடமைகளை நிறைவேற்றுவதிலிருந்தே பெறப்படும். அதில் எவனும் தன் உரிமைகளைப் பற்றி எண்ணவே மாட்டான். அவை தேவையான போது கடமைகளைச் சிறப்பாகச் செய்பவர்களுக்கு தாமே வந்து சேரும்.

- ஹரிஜன், 25.2.1939, பக்கம் 64

இது வரையில் நாம் எல்லோரும் நம் குடும்பங்களின் நலனுக்காகவே பாடுபட்டு வந்தோம். இனி நம் நோக்கை இன்னும் விரிவாக்கிக் கொண்டு நாட்டு மக்களனைவரின் நலனையும் அதில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

கிராம சேவையைப் பற்றி எவ்வளவோ பேர் எவ்வளவோ விதமாகச் சொல்லி நாம் கேட்டிருக்கிறோம். இது வரையில் கிராம சேவை என்றால் பெரும்பாலும் கிராம மக்களுக்கு அவர்களின் உரிமைகளைப்பற்றி எடுத்துச் சொல்லி பிரசாரம் செய்வதே என்று எண்ணப்பட்டு வந்தது. சில சமயங்களில் அவர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்காக எடுக்கப்படும் நடவடிக்கைகளும் இதில் சேர்ந்ததாகக் கருதப்பட்டதுண்டு. ஆனால் நான் உங்களுக்கு எடுத்துகூற வந்திருக்கும் கிராம சேவை கிராம வாசிக்கு அவனுக்குள்ள கடமைகளை அறிவுறுத்துவதேயாகும்.

தன் கடமைகளைச் சரியாகச் செய்பவனுக்கு உரிமைகள் அவன் கேளாமல் தாமே வந்து சேரும். உண்மையில் தன் கடமைகளைச் செய்வதற்கு ஒருவனுக்குள்ள உரிமையே எல்லாம்; அதற்காகவே அவன் வாழ்கிறான், அதற்காகவே அவன் சாகவும் துணிவான் என்று இருக்கவேண்டும். அதிலேயே நியாயமான எல்லா உரிமைகளும் அடங்கிவிட்டன. இது வல்லாத மற்றவையெல்லாம் ஏதோ ஒரு பெயரில் நடக்கும் சுரண்டலேயாகையால் அதிலிருந்து ஹிம்சை தோன்றி வளரவே செய்யும். - ஹரிஜன், 27.5.1939, பக்கம் 143

நியாயமாக நமக்குக் கிடைக்க வேண்டியவையும், போற்றிப் பாதுகாக்க வேண்டியவையுமான எல்லா உரிமைகளும் நம் கடமைகளைச் சரியாகச் செய்வதனால் பெறப்படுகின்றன. இவ்வாறு பார்க்கையில் உயிர் வாழ்வதற்குள்ள உரிமையே உலகக்குடி மகனுக்குள்ள கடமையை சரியாகச் செய்கையில் தான் நமக்கு கிடைக்கும். இந்த ஜீவாதாரமான விஷயத்திற்காக ஒவ்வொரு ஆடவன், பெண் ஆகியோரின் கடமைகளை விவரிப்பதும் அவர்களின் ஒவ்வொரு உரிமையும் அவற்றோடு இணைந்திருப்பதை விளக்குவதும் சுலபமாயிருக்கும். இவையல்லாத உரிமைகளெல்லாமே சுவைக்குதவாதவை என்று காட்டுவதில் சிரமமே இல்லை.

- ஹரிஜன், 8.6.1947, பக்கம் 184

ஒவ்வொருவரும் உரிமைகளை வற்புறுத்தாமல் தம் கடமையை மட்டும் செய்வார்களானால் மாந்தர் அனைவரிடையிலும் ஒழுங்கும் கட்டுப்பாடும் உடனே அமைந்துவிடும். அரசர்களுக்கு ஆட்சி புரிவதற்கு கடவுளே அளித்துள்ள உரிமையுண்டு. குடிகளெல்லோரும் அவர்களுக்கு மரியாதையுடன் பணிந்து நடக்கக் கடமைப்பட்டவர் என்று சொல்வதற்கு அர்த்தமில்லை. இந்த வழி வழியாக வந்துள்ள உயர்வு தாழ்வுகளினால் சமூகத்தின் நலனுக்குத் தீங்கு விளைவதால் இவை போயாக வேண்டும் என்பது உண்மையாயினும் இதுவரையில் அமுக்கி நசுக்கப்பட்டு வந்த சாதாரண மக்கள் தம் உரிமைகளை அப்பட்டமாக வற்புறுத்துவதனால் அதே அளவும் அதைவிட அதிகமாகவும் தீங்கு விளையும்.

மக்கள் தம் உரிமைகளை வற்புறுத்துவதனால் அதிகத் தொகையினரான அவர்களுக்கு அதிகத் தீங்கு விளைய, தெய்விகமானதோ, வேறு வகையானதோ ஆன உரிமைகள் கொண்டாடுவோர் குறைவாகையால் அவர்களின் துயரம் குறைவாயிருக்கும். அவர்கள் கோழைத்தனமாகவோ, தீரமாகவோ உயிரை விடலாம்; ஆனால் ஒரு சிலரின் சாவினால் திருப்தி அளிக்கக்கூடிய ஒழுங்கான வாழ்க்கை வராது.

எனவே உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் உள்ள பிரிக்க முடியாத உறவை நாம் புரிந்துகொள்ள வேண்டும். சரியாக நிறைவேற்றப்பட்ட கடமைகளிலிருந்து விளையும் உரிமைகளைத் தவிர வேறு எதனாலும் பயனில்லையென்று நான் கூறத்துணிவேன். அவை பிறரிடமிருந்து பறிக்கப்பட்டவையாகவே இருக்குமாகையால் அவைகளை எவ்வளவு விரைவில் உதறி எறிகிறோமோ அவ்வளவுக்கு நல்லது ... கடமையைச் செய்கையில் அதிலிருந்து இயல்பாகப் பிறக்கும் சக்தி சத்தியாகிரகத்திலிருந்து தோன்றும் சாத்துவிகமான, தோல்வியையே அறியாத சக்தியாகும்.

- ஹரிஜன். 6.7.1947, பக்கம் 217

## 14. ஜனநாயகத்தில் கட்சிகள்

கேள்வி : ஊழியரென்றால் சிறிதுகாலம் சென்றதும் அவருக்கு அதிகாரத்தில் பற்று வந்துவிடுகிறது என்பது எங்கள் அனுபவம். அவரோடு சேர்ந்து உழைக்கும் மற்ற ஊழியர்கள் அவருக்கு அதிகாரப்பித்தம் தலைக்கேறாமல் பார்த்துக்கொள்வது எப்படி? அதாவது, நிறுவனத்தின் ஜனநாயகத் தன்மையை கெடாமல் காப்பது எப்படி? சம்பந்தப்பட்ட மனிதருடன் மற்றவர்கள் ஒத்துழைக்க மறுப்பதனால் ஒன்றும் பயன் உண்டாவதில்லை என்று எங்களுக்குத் தெரிய வந்திருக்கிறது; நிறுவனத்தின் வேலையே இதனால் கெட்டுப்போகிறது.

பதில் : இது உங்கள் அனுபவம் மட்டுமல்ல, அனேகமாய் எல்லோருடைய அனுபவமும் இதுவே. ஒவ்வொரு மனிதனுக்கும் அதிகாரத்தில் ஆசை ஏற்படுவது சகஜம்; அது அவன் சாவோடு தான் தீருகிறது. ஆகையால் அவனோடு வேலை செய்யும் சக ஊழியர்கள் அவனை அடக்குவது சிரமம். இதற்கு முக்கியமான காரணம் அனேகமாய் அவர்களில் ஒவ்வொருவரிடமும் அதிகாரத்தில் ஆசை என்ற இதே குறை இருக்கக்கூடும் என்பதுதான். உலகில் முழுதும் சாத்துவிக முறையிலமைந்த நிறுவனம் ஒன்று உண்டென்று நம்மால் சொல்ல முடியாதிருக்கும் வரையில் ஜனநாயக முறையில் அமைந்த நிறுவனத்தையும் நாம் அறிந்திருப்பதாக சொல்வதற்கில்லை. ஏனெனில்

முழுமையான அஹிம்சையை ஆதாரமாகக் கொண்டு இருந்தாலல்லது முழுமையான ஜனநாயகமும் சாத்தியமல்லவென்று ஐயத்திற்கிடமில்லாமல் நிரூபிக்கலாம். நீங்கள் சொல்லும் ஒத்துழையாமை அனேகமாய் பலாத்காரம் கலந்ததாகவே இருந்திருக்குமாகையால் இந்தக் கேள்வி கேட்பது சரிதான். அனுபவபூர்வமாக அஹிம்சை முறையில் நடந்த ஒத்துழையாமை பற்றி எனக்குச் சிறிது தெரியும் என்று நான் சொல்ல முடியுமாகையால் சரியான காரணத்தோடு சாத்துவிகமான ஒத்துழையாமை நடந்ததென்றால் அது வெற்றி பெற வேண்டும். எந்த நிறுவனமும் சாத்துவிக ஒத்துழையாமையினால் கெடாது என்று சொல்வேன். இந்தக் கேள்வி கேட்டுள்ளவருக்குள்ள சிரமம், சிலசமயங்களில் கலப்படமான சாத்துவிக ஒத்துழையாமையும், வேறு சமயங்களில் முழு பலாத்காரமும் சாத்துவிகம் என்ற பெயரில் நிகழ்ந்திருப்பதே. "ஹரிஜன்" "யங் இந்தியா" என்ற இரு பத்திரிகைகளிலும் எவ்வளவோ ஒத்துழையாமைகள் அரைகுறையாய், வெற்றி பெறாமல் போனதன் விவரங்கள் பக்கம் பக்கமாய் வெளியாகியிருக்கின்றன. இவ்வாறு அவை வெற்றி பெறுவதற்குக் காரணம், அவைகளில் பலாத்காரம் கலந்து விட்டதோ, அல்லது அவை பலாத்காரமயமாய் இருந்ததோ தான். எனது நீண்ட அனுபவத்தில் பிறர் அதிகார ஆசை பிடித்தலைகிறார்கள் என்று குறை கூறுகிறார்களே, அவர்களின் அதிகார ஆசையும் குறைவாயிருப்பதில்லை என்பதை கண்டிருக்கிறேன். எனவே இவர்களுக்கும் அவர்களுக்கும் உள்ள வித்தியாசம் 6க்கும் அரை டஜனுக்கும் உள்ள வித்தியாசமாகவே இருப்பதால் இவர்களிருவரிடையிலும் வித்தியாசம் கண்டுபிடிக்கும் முயற்சி வீண் முயற்சியாகத்தான் இருக்கும்.

கேள்வி : எல்லா கிராமங்களிலுமே கட்சிகளும் கோஷ்டிகளும் இருந்து வருகின்றன. நாம் ஸ்தல மக்களிடமிருந்து உதவி பெறும் போது, விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், கிராமத்தின் இந்தக் கட்சிப் பூசல்களில் சிக்கிக் கொள்கிறோம். இவைகளில் சிக்காமல் நம் வேலையைச் செய்வதற்கு வழியென்ன? இரண்டு கட்சிகள் இருந்தால் அவை இரண்டையுமே புறக்கணித்துவிட்டு வெளியே இருந்து வந்த ஊழியர்களின் உதவி கொண்டு நாம் வேலை செய்யலாமா? இவ்வாறு செய்கையில் வெளி ஆட்களை நம்பியே வேலை நடக்க வேண்டியதாகி விடுகிறது. அவர்கள் அங்கிருந்து போனதும் வேலை படுத்துப் போவதால் ஊர்க்காரர்களே முன் வந்து வேலையைச் செய்து கொண்டு போவதற்கும், அவர்கள் தம்முள் ஒத்து வாழ்வதற்கும் நாம் என்ன செய்வது?

பதில் : கட்சிகளும் கோஷ்டிகளும் தம் நகரங்களைப் போலவே கிராமங்களிலும் இருந்து வருவது இந்தியாவின் துரதிருஷ்டம் தான். கிராமங்களின் நலனில் அக்கறையின்றி கட்சிகளின் அதிகார வேட்கைக்கு கிராமங்களைப்

பயன்படுத்தும் நோக்கத்துடன் அரசியல் தலைவர்கள் கிராமங்களில் புகுவது அவைகளின் முன்னேற்றத்திற்கும் உதவாமல், அதை தடுப்பதாகவே அமைகிறது என்ன ஆனாலும் இயன்ற வரையில் கிராம மக்களின் உதவியைக் கொண்டு தான் நாம் கிராம வேலைகளைச் செய்ய வேண்டும் என்பேன். அதிகார அரசியல் காற்று நம்மீது வீசாதிருந்தால் நாம் தவறுகள் செய்வதற்கு இடமிராது. நாட்டின் முதுகெலும்பான இந்தியக் கிராமங்களை ஆங்கிலப்படிப்பு படித்த ஆடவர்களும் பெண்களும் மன்னிக்க முடியாத வகையில் அசட்டை செய்திருக்கிறார்கள் என்பது நம் நினைவிலிருக்க வேண்டும். மறந்து விட்ட இதை மீண்டும் நினைவுக்கு கொண்டு வர முயலும் போது நமக்கு இயல்பாகவே பொறுமை வந்துவிடும். நான் சென்றுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் உண்மையும் நாணயமும் உள்ள ஒரு ஊழியராவது எனக்குக் கிடைக்காது இருந்ததேயில்லை. நம் கிராமங்களின் சிறப்பியல்புகளைக் கண்டறிவதற்குத் தேவையான பணிவு நமக்கு இல்லாது போகையில் நம் கண்ணில் அவர் படுவதில்லை. ஸ்தலத்தின் சண்டை பூசல்களுக்கும் வழக்குகளுக்கும் நமக்கும் சம்பந்தமில்லை என்ற எண்ணத்திலேயே நாம் அங்கே போய் வேலை செய்ய வேண்டும். எல்லோருடைய உதவியையும், எல்லாக்கட்சியாரின் ஆதரவையும் பெறும் எண்ணம் இருக்குமானால் நமக்கு இதுப் போகப்போக சுலபமாகி விடும். கிராம மக்களை ஒதுக்கி விட்டு நாமே எல்லாம் செய்து விடலாம் என்று நினைத்தால் நம்மால் ஒன்றுமே ஆகாது. இந்தச் சிரமம் இருப்பது எனக்குத் தெரிந்திருந்ததனாலேயே ஒரு கிராமத்தில் ஒரு ஊழியரே இருந்து வேலை செய்ய வேண்டும், இந்த வங்காளத்தில் வங்காளி மொழி தெரியாத ஊழியர் மட்டும் தனக்கு மொழி பெயர்த்து உதவுவதற்காக வங்காளி தெரிந்த ஒருவரைத் தம்மோடு வைத்துக் கொள்ளலாம் என்ற விதியை மிகவும் கண்டிப்பாகப் பின்பற்ற முயன்றிருக்கிறேன். இவ்வாறு செய்ததனால் இதுவரையில் நன்மையே விளைந்திருக்கிறது என்று தான் என்னால் சொல்ல முடியும். ஆகையால் நீங்கள் தம் அனுபவம் என்று சொல்வதை என்னால் அப்படியே எடுத்துக்கொள்ள முடியாது. அதோடு, பொறுத்துப் பார்க்காமல் அவசரப்பட்டு முடிவுக்கு வரும் துர்ப்பழக்கம் ஒன்றும் நமக்கு வந்து விட்டது என்பேன். 'கிராமத்தின் வேலை முழுவதற்கும் வெளியாட்களையே நம்ப வேண்டியிருக்கிறது' அவர்கள் போனதும் வேலை படுத்துப் போகிறது என்று கிராமங்களை ஒரேயடியாகக் குறை கூறுமுன், ஒரு கிராமத்தில் சில ஆண்டுகள் இருந்து ஸ்தல ஊழியர்களின் உதவி கொண்டு வேலை செய்ய முயன்று பெற்ற அனுபவமும் ஸ்தல ஊழியர் மூலமும் அவர்களைக் கொண்டும் வேலை செய்ய முடியாது என்பதற்கு முடிவான ருஜு ஆகாது என்பேன். உங்கள் கூற்றிலிருந்தே நீங்கள் சொல்வது சரியல்ல என்று தெரிகிறது. நீங்கள் இறுதியில் கூறியதை

விவரமாக ஆராய்வதற்கு இப்போது அவசியமில்லாமற் போய் விட்டது. பிரதான ஊழியரிடம், 'நீங்கள் வெளியிலிருந்து உதவி ஏதேனும் பெற்றுவந்தால் அதை இனி வேண்டாமென்று சொல்லி விடுங்கள். ஒருவராக துணிவுடனும் புத்திசாலித்தனமாகவும் ஸ்தலத்திலுள்ளவர்கள் அளிக்கும் உதவியைப் பெற்று வேலை செய்யுங்கள். உங்களுக்கு வெற்றி ஏற்படவில்லையென்றால் அதற்குக் காரணம் நீங்களேயன்றி வேறு எவரும் அல்லது எதுவும் அல்ல' என்று கண்டிப்பாகச் சொல்வேன்.

- ஹரிஜன் 2.3.1947 பக்கம் 44

## பெரும்பான்மை விதி

மனச்சாட்சி பற்றிய விஷயங்களில் பெரும்பான்மை விதிக்கு இடமில்லை.

- யங் இந்தியா, 4.8.1920 பக்கம் 3

நாம் கூட்டத்தில் செய்த தீர்மானம் அல்லது கூட்டத்தின் முடிவு என்பதை கேலிக் கூத்தாக்கத் தக்க அளவு மிகைப்படுத்தி, பெரும்பாலோரின் முடிவுகளுக்கு அடிமைகளாகக் கூடாது. அது பழைய காலத்திய மிருக பலத்திற்கு புத்துயிர் அளித்து, அதை மேலும் உக்கிரமாக்குவதாகும். சிறுபான்மையோரின் உரிமைகளுக்கு மதிப்பளிப்பதென்றால் பெரும்பான்மையோர் அவர்களின் அபிப்பிராயத்தை மதிப்பதும், அவர்கள் செயலைப் பொறுத்துக் கொண்டு போவதுமாகும். சிறுபான்மையோரின் குறைகளைக் காது கொடுத்துக் கேட்கவும், அவர்களுக்கு பிற வகையில் அவமானம் நேராமல் பார்த்துக்கொள்ளவும் தக்க ஏற்பாடுகள் செய்வது பெரும்பான்மையோரின் கடமையாகும். தனி மனிதர்கள் தாம் செய்யும் முடிவுகளை பெரும்பான்மையோருக்காக விட்டுக் கொடுக்க நேருமாயின் அந்த சுயராஜ்யம் வெறும் கேலிக் கூத்தாகத்தான் இருக்கும்.

- யங் இந்தியா, 8.12. 1921 பக்கம் 403

பெரும்பான்மையோரின் கருத்து பற்றிய விதியை நாம் சில இடங்களில் தான் பிரயோகிக்க வேண்டும். அதாவது உள் வயணங்கள் விஷயத்தில் பெரும்பான்மையோரின் முடிவுக்குப் பணிய வேண்டியது தான். ஆனால் பெரும்பான்மையோர் செய்யும் முடிவு எவ்வாறு இருந்தாலும் அதற்கு உட்படுவது என்பது அடிமைத்தனமேயாகும். மக்கள் ஆட்டு மந்தைகளைப் போல நடந்து கொள்ளவேண்டியிருப்பது ஜனநாயகமாகாது. ஜனநாயக ஏற்பாட்டில் தனி மனிதனின் கருத்துச் சுதந்திரமும் மிகவும் கவனித்துக் காக்கப்படும். ஆகையால் சிறுபான்மையோருக்கு பெரும்பான்மையோரின் முடிவுக்கு மாறாக நடந்து கொள்ள முழு சுதந்திரமுண்டு என்று நான் நம்புகிறேன்.

- யங் இந்தியா 2.3.1922, பக்கம் 129

நாம் நம் இஷ்டம் போல சிந்திக்கவும் செயல்படவும் சுதந்திரம் கோருவதால் பிறருக்கும் இவைகளை வழங்க வேண்டும். பெரும்பான்மையோரின் ஆட்சி, நிர்ப்பந்தபடுத்தி காரிங்களைச் செய்விக்கப்புகுகையில் ஒரு சிலராலமைந்த அதிகார வர்க்கத்தின் ஆட்சியைப் போலவே அதுவும் சகிக்க முடியாததாக ஆகிவிடுகிறது. நாம் பொறுமையுடனும் சாந்தமாகவும் விஷயத்தை எடுத்துச்சொல்லியும், காரண காரியங்கள் வாதித்தும் சிறுபான்மையினரை நம் வழிக்குக் கொண்டு வர முயல வேண்டும். உத்தரவுக்கு அடங்கியும் தண்டனைக்கு பயந்து காரியங்கள் செய்து பழகிப்போய் விட்டமையால், நாளுக்கு நாள் அதிகமாகி வரும் தெம்பில் ஆட்சியாளர்கள் நமக்கு இழைத்து வந்துள்ள அதே கொடுமைகளை இன்னும் அதிகமாக நமக்குக் கீழே உள்ள குறைந்த தெம்புள்ளவர்களிடத்தில் நாம் செய்யக் கூடும். அவ்வாறு செய்தால் பழைய நிலைமையே மேல் என்று சொல்ல வேண்டியதாகி விடும்.

- யங் இந்தியா 26.1.1922, பக்கம் 54

நான் பரிணாமத்திற்கு அதிக மதிப்பளியாமல் பொருளின் குணம் அல்லது தன்மையே முக்கியமென்று கருதுகிறேன். சந்தேகங்கள், பூசல்கள், முரண்படும் நலன்கள், குருட்டு நம்பிக்கை, அச்சம், அவநம்பிக்கை ஆகியவற்றின் இடையில் ஏராளமான பேர் நம் பக்கத்தில் இருப்பதில் நன்மையொன்றும் இல்லாததோடு அதனால் ஆபத்தும் விளையலாம். நல்ல கட்டுப்பாட்டுக்கு அடங்கி ஏராளமான பேர் ஒரே மனிதனைப் போல ஒழுங்காக நடக்கும் போது அவர்களை எவராலும் எதிர்க்க முடியாது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு திசையில் இழுத்துக் கொண்டு, என்ன செய்வது, எங்கே போவது, என்று தெரியாத நிலையில் உள்ள பெருங்கூட்டம் தானே அழிந்து போகும். - யங் இந்தியா, 30.4.1925, பக்கம் 152

மிகவும் குறைந்த தொகையினர் என்பதாலேயே நீங்கள் நடுங்கிச்சாகவோ பணிந்து போகவோ வேண்டியதில்லை. அவ்வாறு இருப்பதே சில சமயங்களில் உங்களுக்கு நன்மையாயிருக்கும். பொது மக்கள் என்னிடம் காட்டும் பக்தி காரணமாக நம்மோடு சேர்ந்துள்ள பெருங்கூட்டம் என் முன்னேற்றத்திற்குத் தடையாயிருப்பதனால் நான் ஒருவனே தனியாய் நின்று காரியங்கள் செய்யவிரும்புவதாக எவ்வளவோ முறை சொல்லியிருக்கிறேன். இந்தத்தடை இன்றேல் நான் எதையும் லட்சியம் செய்யாது நடப்பேன்.

- யங் இந்தியா, 13.8.1925, பக்கம் 279

சேவை செய்யவோ, தேர்தலுக்கு நிற்கவோ முன்வருபவரிடம், 'நீர் எந்த அளவுக்கு சரியான ஆடவராகவோ பெண்ணாகவோ இருப்பீர்? தேவையான சந்தர்ப்பங்களில் நீர் எந்த தியாகத்திற்கும் சித்தமாயிருப்பீரா?' என்றே நான்

கேட்பேன். இந்தக் கேள்விக்கு சரியாக விடை அளித்து, இந்தப் பரீட்சையில் தேறுவாரானால் நான் முதலில் மிகவும் குறைந்த தொகையினரைக் கொண்ட சமூகத்தைச் சேர்ந்தவரைத் தேர்ந்தெடுப்பேன். அவர்கள் இந்துக்களா, முஸல்மான்களா அல்லது குறிப்பிட்ட வேறொறு சமூகத்தினரா என்பதைப் பாராமல் இந்தியா முழுவதன் நன்மையைக் கருத்தில் கொண்டு, நியாயமான முறையில் சிறுபான்மை சமூகங்கள் அனைத்திலிருந்தும் முதலில் ஆட்களைப் பொறுக்கி எடுப்பேன்.

- யங் இந்தியா, 13.8.1925, பக்கம் 278

எனக்கு அஹிம்சையில் உள்ள அசைக்க முடியாத நம்பிக்கைக்கு சிறுபான்மையோருக்கு, அவர்கள் உண்மையிலேயே பலவீனமாயிருக்கையில், விட்டுக்கொடுப்பது என்றே அர்த்தம். சாதிப் பித்தரின் வாயை அடக்குவதற்குள்ள சிறந்த வழி அவர் கோருவதையெல்லாம் அளித்து விடுவதே ஆகும். அவர்களை எதிர்ப்பதனால் அவர்களுக்கு ஏற்கனவே நம்மிடமுள்ள சந்தேகம் அதிகமாகவும், அவர்களின் எதிர்ப்பு மேலும் உக்கிரமாகிவிடும். - யங் இந்தியா, 2.7.1931, பக்கம் 162

## 15. ஜனநாயகத்தில் சத்தியாக்கிரகம்

நான் சத்தியாக்கிரகத்தையும் சாத்துவிகச் சட்டமறுப்பையும் பற்றிச் சொல்லி, அதைச் செய்ய எல்லோரையும் அழைக்க ஆரம்பித்தபோது பலவந்தமான சட்ட மறுப்பும் அதில் சேர்ந்ததாகக் கருதப்பட்டதேயில்லை. பலாத்காரத்தின் மூலம் சத்தியத்தை ஒரு பொழுதும் பரப்ப முடியாது என்று என் அனுபவம் எனக்கு போதித்திருக்கிறது. தம் கட்சியின் நியாயத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் எல்லையில்லாத பொறுமை உள்ளவர்களாய் இருக்கவேண்டும். மேலும், பலாத்காரத்தில் இறங்கி சட்டமறுப்புச் செய்யவும், நேரிடையாகவே பலாத்காரம் செய்யவும் கனவிலும் நினையாதவர்களே சாத்துவிகச் சட்டமறுப்பு செய்ய தகுதி உள்ளவர்கள். ஒருவனால் ஒரே சமயத்தில் ஆத்திரப்படவும் சாந்தமாக நடந்து கொள்ளவும் முடியாததைப் போல ஒரே மனிதனால் சாத்துவிகச் சட்டமறுப்புச் செய்யவும் பலாத்காரமாக சட்டத்திற்குப் பணிய மறுப்பதும் சாத்தியமில்லை. தன்னடக்கம் என்பது தன் ஆசாபாசங்களை அடக்கிய பிறகே பெறப்படுவதைப் போல நாட்டின் எல்லா சட்டதிட்டங்களுக்கும் தன்னிச்சையாகப் பணிந்து நடந்து பழக்கமான ஒருவருக்கே சாத்துவிகச் சட்ட மறுப்புச் செய்யும் சக்தி வரும். மேலும் எவ்வளவோ ஆசாபாசங்களுக்கிடையில், அவைகளையெல்லாம் வென்று பழக்கமான ஒருவரையே எந்த ஆசைகளினாலும் அசைக்க முடியாது என்று சொல்ல முடிவதைப் போல, கோபப்படுவதற்கு எவ்வளவோ காரணமிருந்தும் நம்மால் கோபப்படாது இருக்கமுடியும் பொழுதே நாம் கோபத்தை

வென்றுவிட்டதாகச் சொல்ல இயலும். - யங் இந்தியா, 28.4.1920, பக்கம் 8

சாத்துவிகச் சட்ட மறுப்பு என்பது மிகவும் தூய சட்டபூர்வமான போராட்டத்தின் இனத்தைச் சேர்ந்தது என்பது என் திடமான அபிப்பிராயம். அதன் சாந்தமான, அதாவது சாத்துவிகத் தன்மை வெறும் மேல் பூச்சாக, உலகை ஏமாற்றும் வித்தையாய் இருக்குமானால் அது மிகவும் வெறுக்கத்தக்கதாய் ஆகிவிடும் என்பது நிச்சயம். - யங் இந்தியா, 15.12.1921, பக்கம் 419

சட்ட மறுப்பு சாத்துவிகமானதாய் இருப்பதற்கு அது மனப்பூர்வமாயும், மரியாதையுடனும், அடக்கமாகவும், எதிரியைச் சிறிதும் அலட்சியம் செய்யாததாயும் இருக்க வேண்டியதோடு, எல்லோருக்கும் புரியும் ஒரு தத்துவத்தின் அடிப்படையிலமைந்ததாயும், மனம் போன போக்கில் செய்யப்படாததாயும், இவை எல்லாவற்றுக்கும் மேலாக எவரிடமும் நமக்குள்ள துவேஷம் அல்லது மனத்தாங்கல் காரணமாக செய்யப்படாததாயுமிருக்க வேண்டும்.

- யங் இந்தியா, 24.3.1920, பக்கம் 4

அரசாங்கத்தின் சட்டங்கள் மனச்சாட்சியை புண்படுத்தாமலும், மதத்தை அவமதியாமலும் இருக்கும் வரையில், தொந்தரவு அளிப்பவையாயிருந்தாலும் அவைகளுக்கு மனப்பூர்வமாய் அடங்கி நடந்து பழகியவர்களே சாத்துவிகச் சட்டமறுப்புச் செய்யலாம். அவர்கள் அதற்குரிய தண்டனையை மகிழ்ச்சியோடு அனுபவிப்பதற்கும் சித்தமாயிருக்க வேண்டும். சட்ட மறுப்பின் உள்நோக்கம், அதிலடங்கியுள்ள தத்துவம் அன்பின் மூலம், அல்லது கஷ்டங்களை நாமே வரவேற்று அனுபவிப்பதன் மூலம் எதிரியை நம் வழிக்குத் திருப்புவதாகையால் அதில் சிறிதும் பலாத்காரம் கலக்கக் கூடாது. - யங் இந்தியா, 3.11.1921, பக்கம் 346-47

சத்தியாக்கிரகத்தினால் சாதிக்க முடியாத உயர்ந்த லட்சியம் எதுவுமில்லையென்று நான் அஞ்சாமலும் உறுதியுடனும் சொல்வேன். அதைவிட உயர்ந்த, பிழைபடாத, ஆற்றல் வாய்ந்த சக்தி வேறு இல்லை. சோஷலிசம் எனப்படும் நிலையை வேறு எதனாலும் நம்மால் எய்த முடியாது. சமூகத்தை வதைக்கும் அரசியலின் கொடுமைகளையும், பொருளாதார சிரமங்களையும், நடத்தைக் கேடுகளையும் சத்தியாக்கிரகத்தினால் போக்கிவிட முடியும்.

- ஹரிஜன், 20.7.1947, பக்கம் 240

சாத்துவிகச் சட்ட மறுப்பு ஒவ்வொரு குடிமகனுக்கும் இயல்பாகவேயுள்ள உரிமை என்று நான் நினைப்பதை எல்லோரும் ஏற்றுக்கொண்டால் மிகவும் மகிழ்வேன். அவன் தன் மனிதத் தன்மையை இழக்கத் தயாராயிருந்தாலல்லது இந்த உரிமையை விடக்கூடாது. சாத்துவிகச் சட்ட மறுப்பின் அடியில் அராஜகம் ஒரு பொழுதும் தோன்றாது. பலாத்கார முறையில் சட்டத்திற்கு உட்பட மறுப்பது

அராஜகத்தில் கொண்டுபோய் விடலாம். எந்த அரசாங்கமும் பலாத்காரமாக சட்டத்திற்குப் பணிய மறுப்போரை போலீசையும் ராணுவத்தையும் கொண்டு அடக்கும். அவ்வாறு செய்யாத போது அதுவே அழிந்து போகும். ஆனால் சாத்துவிகச் சட்டமறுப்பை அடக்குவதென்பது மனச்சாட்சியை அடக்குவதற்குச் செய்யும் முயற்சியேயாகும்.

- யங் இந்தியா, 5.1.1922, பக்கம் 5

எல்லோரும் நாம் சொல்வதை உடனே கேட்பார்கள் என்பதனால் வரிகொடா இயக்கம் ஆரம்பிக்கக்கூடாது. மக்கள் அளிக்கும் சம்மதம் நம்மை ஆபத்தில் கொண்டு போய் விட்டுவிடும். அந்த வரி கொடாமை சாத்துவிகமானதாகவோ அஹிம்சை முறையில் நடப்பதாகவோ இராமல் நேர்மாறாய், பெரும்பாலும் பலாத்காரத்தில் கொண்டுபோய் விடக்கூடியதாகவே இருக்கும். குடியானவர்கள் சாத்துவிகமாக வரியை மறுப்பதற்கு உள்ள காரணங்களையும், அதிலுள்ள நன்மைகளையும் நன்கு புரிந்து கொள்ளுமாறும், தம் உடமைகளும் நில புலன்களும் பறிமுதல் செய்யப்படுவதையும், தம் கால்நடைகள் ஏலத்தில் விடப்படுவதையும் (இவையெல்லாம் கைமாறுவது சிறிது காலத்திற்கே என்றாலும்) நடப்பது நடக்கட்டுமென்று அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கவும் பயிற்றப்படாத வரையில் அவர்களிடம் வரிகொடா இயக்கம் தொடங்குமாறு சொல்லவேகூடாது.

- யங் இந்தியா, 26.1.1922, பக்கம் 57

நாம் எப்படியோ சிறை புகுந்து விட்டால் சுயராஜ்யம் வந்து விடாது. எல்லாவகைச் சட்ட மறுப்புமே நமக்கு பணிவைப் போதித்து, நம்மிடையே கட்டுப்பாட்டை உண்டாக்காது. குற்றங்கள் செய்தே பழக்கமான ஒருவனுக்கு அவன் சிறை செல்வதனால் விடுதலை கிடைத்து விடாது. சாத்துவிகமே உருவானவர் போன்றவர்களுக்கு மட்டுமே அவை சுதந்திரத்தின் கோயில்கள். சோக்ரதர் விஷம் அருந்திக் கொல்லப்பட்டதனால் அவர் இன்றும் இருப்பதாய் நாம் உணருகிறோம்; கொலைக் குற்றம் செய்த எண்ணிலடங்காதவர்கள் தூக்கிலிடப்படுகையில் நமக்கு இவ்வாறு தோன்றுவதில்லை. பெயரளவுக்கு அஹிம்சா வாதிகளாய், உள்ளத்தில் துவேஷமும் விரோதமும் பலாத்காரமும் பொங்கி கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கானவர்கள் சிறைக்குப் போவதனால் சுயராஜ்யத்தைப் பறித்து வந்து விடலாம் என்று எண்ணுவதற்குக் காரணமே இல்லை.

- யங் இந்தியா, 2.3.1922, பக்கம் 135

பேராற்றல் வாய்ந்த நேரிடை நடவடிக்கைகளுள் சத்தியாக்கிரகம் ஒன்றாகையால் சத்தியாக்கிரகி பிற வழிகளிலெல்லாம் முயன்று பார்த்துப் பயனில்லாது போன பிறகே சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்குவான். இதனால் அவன் அடிக்கடியும் தொடர்ந்தும் தம் மீது அதிகாரம் செலுத்துவோரை அணுகி,

கேட்டுக்கொள்வான். பொது மக்களுக்கு நிலைமையை எடுத்து விளக்கி ஆதரவு கோருவான். எதிர்ப்பட்டவர்கள் எல்லோரிடமும், அவர்கள் செவிசாய்க்கத் தயாராயிருந்தால், அமைதியாகவும், பொறுமையாகவும் தன் கட்சியை எடுத்துச் சொல்வான். இந்த எல்லா வழிகளிலும் முயன்று பார்த்துப் பயனில்லை என்று தெரியவந்த பிறகே சத்தியாக்கிரகத்தில் இறங்குவான். ஆனால், அகக்குரல் தன்னை ஏவுவது தெரிந்து, சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கிவிட்டால், அதன் பிறகு செய்வதற்கு வேறு ஒன்றுமே இல்லை என்னும் போது முன் வைத்த காலை பின்வைக்கமாட்டான். - யங் இந்தியா, 20.10.1927, பக்கம் 353

சாத்துவிகப் போர் முறையில் கட்டுப்பாட்டிற்கு ஓர் இடமுண்டு. ஆனால் அது மட்டும் இருந்தால் போதாது. சத்தியாக்கிரகப் படையில் சேர்ந்துள்ள ஒவ்வொரு வீரனும் தன்னை போர் வீரனாகவும் ஊழியனாகவும் கருதவேண்டும். ஆனால் தேவை ஏற்படும்போது ஒரு கணத்தில் ஒவ்வொரு சத்தியாக்கிரக வீரனும் தனக்குத்தானே சேனாதிபதியாகவும், தலைவனாகவும் கூட இருக்க வேண்டும். வெறும் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுப் பழகி இருந்தால் மட்டும் ஒருவனால் தலைவனாகி விடமுடியாது. தலைவனுக்கு தான் ஏற்றுள்ள பணியில் நம்பிக்கையும், நெடு நோக்கும் இருத்தல் அவசியம். - ஹரிஜன், 28.7.1940, பக்கம் 227

சத்தியாக்கிரகம் பலாத்காரத்தையும், கொள்ளையிடுவதையும், தீயிடுதல் போன்றவைகளையும் அனுமதிக்காது என்று எவ்வளவோ முறை சொல்லியிருக்கிறேன். ஆயினும் சத்தியாக்கிரகத்தின் பெயரால் நாம் கட்டிடங்களை எரித்திருக்கிறோம்; ஆயுதங்களைப் பலவந்தமாகப் பறித்திருக்கிறோம்; தண்ட வசூல் செய்திருக்கிறோம்; தந்திக் கம்பிகளை அறுத்திருக்கிறோம்; ஒரு பாவமும் அறியாதவர்களைக் கொன்றும் கடைகளையும் வீடுகளையும் சூறையாடியுமிருக்கிறோம். இத்தகைய அடாபிடிச் செயல்களில் இறங்குவதனால் நான் சிறைக்கும் தூக்கு மேடைக்கும் தப்பலாமென்றாலும் தப்ப விரும்ப மாட்டேன்.

- "மகாத்மா காந்தியின் உரைகளும் எழுத்துக்களும்" (ஆங்கிலம்) பக்கம் 476.

அரசாங்கம் சொல்லும் எதற்கும் கீழ் படிவதில்லை, அதை எதிர்ப்பது என்று இருந்தால், அது சட்டத்தை மீறிய செயல்களிலும், மனம் போனபடி நடப்பதிலும், அதன் விளைவாக தானே அழிந்து போவதிலும் தான் போய் முடியும்.

- யங் இந்தியா, 2.4.1931, பக்கம் 58

எந்த சாத்துவிகச் சட்ட மறுப்பையும் செய்வதற்குள்ள ஒரு முக்கியமான நிபந்தனை அதைச் செய்வோரிடையிலோ, பொது மக்களிடையிலோ பலாத்காரம் தலையெடுக்காது என்பது நிச்சயமாயிருக்கவேண்டும். பலாத்காரம் நடந்த பிறகு அது அரசாங்கத்தின் தூண்டுதலினால் நடந்தது அல்லது சட்ட மறுப்புச்

செய்வோருக்கு விரோதிகளாயுள்ள கும்பல்களின் வேலை அது என்று சமாதானம் சொல்லித் தப்ப முடியாது. எங்கும் பலாத்காரமும் ஹிம்சையுமாயிருக்கையில் சாத்துவிகச் சட்டமறுப்புச் செய்யக் கிளம்பினால் அது வெற்றி பெறாது என்பது தெரிந்த விஷயம். இதற்கு சத்தியாக்கிரகியினால் ஒன்றுமே ஆகாது என்று அர்த்தமில்லை. அதற்கு அவர் சாத்துவிகச் சட்ட மறுப்பு அல்லாத வேறு வழிகளைக் கடைபிடித்துச் செயல்பட வேண்டும். - ஹரிஜன், 18.3.1939, பக்கம் 53

மக்கள் கையில் அதிகாரம் எதுவும் இல்லாதபோது அவர்களுக்குப் பயன்படவென்றே உருவாக்கப்பட்டிருப்பவை சாத்துவிகச் சட்ட மறுப்பும் ஒத்துழையாமையும், அவர்கள் கைக்கு அதிகாரம் அல்லது ஆட்சி வந்ததும், இயல்பாகவே எல்லா வகைக் குறைகளும் சட்டம் ஒப்பும் முறைகளில், அதாவது நீதி மன்றங்களினாலும் சட்டசபைகளினாலும் தீர்க்கப்படும்.

- "அமிருதபஜார் பத்திரிகா" (ஆங்கிலம்) 15.1.1945

தவறுகள் ஏதேனும் நிகழ்ந்தால் அவைகளை அரசாங்கத்தின் கவனத் திற்குக் கொண்டு வருவதோடு ஜனநாயக ஆட்சியின் கீழ் வாழும் மக்கள் நிறுத்த வேண்டும். விரும்பினால் அவர்கள் தம் அரசாங்கத்தை மாற்றலாம். ஆனால் அதற்கு எதிராகப் போராட்டம் நடத்தி, அதை இயங்காமல் செய்யக் கூடாது. மிகுந்த ஆற்றல் வாய்ந்த ராணுவமும் கடற்படையும் கொண்ட அந்நியர் அரசாங்கம் அல்ல நம்முடையது; அவர்கள் தம் சக்தியை மக்களிடமிருந்தே பெற வேண்டியிருக்கிறது.

- "தில்லி டயரி" (ஆங்கிலம்), பக்கம் 86, பதிப்பு 1948

பூரண சாத்துவிகச் சட்டமறுப்பு என்பது பலாத்காரக் கலப்பில்லாது செய்யப்படும் எதிர்ப்பே. சாத்துவிகச் சட்ட மறுப்பை முழுமையாகச் செய்பவர் அரசாங்கம் என்றும், அதன் அதிகாரம் என்றும் ஏதோ இருப்பதையே முற்றிலும் மறந்து விடுவார். நியாயத்திற்குப் புறம்பான அரசாங்கச் சட்டங்கள் அனைத்தையும் புறக்கணிப்பதனால் அவர் அதற்குக் கட்டுப்படாத எதிரி ஆகிவிடுகிறார். உதாரணமாக, இவ்வாறு செய்கையில், அதற்கு வரிகளை செலுத்த மறுப்பார்; தனது அன்றாடக் காரியங்களில் அரசாங்கத்தின் தலையீட்டை அனுமதியார். அத்து மீறிப் புகுதல் பற்றிய சட்டத்திற்கு உட்படாமல் ராணுவத்தாருடன் பேசும் பொருட்டு அவர்களின் குடியிருப்புகளுக்குச் செல்வார். குறிப்பிட்ட இடங்களில் தான் மறியல் செய்யலாம் என்று உள்ள நிபந்தனையை மீறி போகக்கூடாத இடங்களுக்கு போய் மறியல் செய்வார். இவற்றையெல்லாம் செய்யும்போது அவர் பலாத்காரத்தைக் கையாளவோ, பலவந்தமாகத் தடுக்கப்பட்டால் அதை எதிர்க்கவோ மாட்டார்; உண்மையில் தமக்கு அளிக்கப்படும் சிறைத்தண்டனையையும் பிற பலாத்காரச் செயல்களையும் வரவேற்பார்; இவ்வாறு

செய்வதற்குக் காரணம், பார்ப்பதற்கு அவர் அனுபவித்து வருவதாயுள்ள சுதந்திரம் தாழமுடியாத பெருஞ்சுமையாய் ஆகிவிடுவது தான். அரசாங்கம் நமக்கெல்லாம் சுதந்திரத்தை அனுமதித்திருப்பது அதன் சட்ட திட்டங்களுக்கு அடங்கி நாம் நடந்து வரும் வரையில்தான் என்று அவர் தம்முள்ளேயே வாதிப்பார். ஒவ்வொரு குடிமகனும் தான் அனுபவிக்கும் சுதந்திரத்திற்காக அளிக்கும் கிரயம்தான் அவன் அதன் சட்டங்களுக்கு அடங்கி நடந்து வருவது. ஆகவே முழுதுமோ அல்லது பெருமளவோ அநியாயமாக நடக்கும் அரசாங்கத்திற்குப் பணிவது நாம் நம் சுதந்திரத்தை நியாய விரோதமாக விற்பதாகும். ஒரு அரசாங்கத்தின் கொடுந் தன்மையை இவ்வகையில் உணரும் ஒரு குடிமகன் அதற்கடங்கி, அதைத் திருப்தி செய்து கொண்டு வாழ விரும்புவதில்லை யாகையால் அவரைப்போல் எண்ணாத மற்றவர்களுக்கு அவர் சமூக விரோதியாகத் தோன்றவும் நியாயத்திற்கு விரோதமாக நடவாமலே அவர் அரசாங்கத்தை தன்னை கைது செய்யுமாறு செய்ய முயலுகிறார். இவ்வாறு கருதுகையில் சாத்துவிகச் சட்டமறுப்பு என்பது ஆன்மாவின் ஆற்றாமையை மிகவும் தெளிவாகக் காட்டுவதற்குள்ள ஒரு சாதனமும், கொடுங்கோலாட்சி தொடர்ந்து நடப்பதை எதிர்ப்பதற்கு மிகவும் தெளிவாக எடுக்கப்படும் நடவடிக்கையுமாகிறது. உலகில் நிகழ்ந்துள்ள சீர்திருத்தங்கள் அனைத்தின் வரலாறு இதுதானே. சீர்திருத்தவாதி தம்மோடு சேர்ந்திருந்தவர்கள் எல்லோருடைய வெறுப்புக்கும் தாம் காரணமானாலும், கொடிய பழக்கங்களோடு தொடர்புள்ள சாதாரணச் சின்னங்களையும் புறக்கணிக்கவில்லையா?

தாம் இது வரையில் எந்த அரசாங்கத்திற்கு அடங்கி இருந்து வந்தார்களோ அதற்கு உட்பட மறுத்து ஒரு குழாத்தினர் கிளம்பும் போதும், அவர்கள் ஏறக்குறைய தாமே ஓர் அரசாங்கம் அமைத்துக் கொண்டது போலாகி விடுகிறது. நான் ‘ஏறக்குறைய’ என்று சொல்லியிருப்பது அரசாங்கம் அவர்களைத் தண்டிக்க முற்படும் போது அவர்கள் அதை எதிர்த்து கிளம்பாமையினால் தான். அரசாங்கம் அவர்களை அவர்கள் இஷ்டம் போல் இருக்க, அல்லது அவர்கள் இஷ்டத்திற்குப் பணிய சம்மதித்தாலல்லது தனி மனிதன் என்ற முறையில் அவர்களுக்கு உள்ள வேலை சிறையில் அடைக்கப்படுவதோ, அல்லது சுட்டுக் கொல்லப்படுவதோ தான். இவ்வாறு தான் 1914-ல் தென் ஆப்பிரிக்காவில் 3,000 இந்தியர்கள் முன் கூட்டியே எச்சரித்து விட்டு, டிரான்ஸ்வால் குடியேற்றச் சட்டத்தை மீறி டிரான்ஸ்வாலின் எல்லையைக் கடந்து உள்ளே புகுந்து, தம்மைக் கைது செய்யும்படி அரசாங்கத்தை நிர்பந்தப்படுத்தினார்கள். அரசாங்கத்தினால் அவர்களை பலாத்காரத்தில் இறங்கவோ, தமக்கு அடங்கிப் போகவோ செய்ய முடியாது போனபோது அது அவர்கள் கோரிக்கையை ஏற்றுக்கொண்டது. ஆகையால் சத்தியாக்கிரகிகளின் படை என்பது போர் வீரனுக்குள்ள எல்லா சட்ட திட்டங்களுக்கும்,

கட்டுப்பாடுகளுக்கும் அடங்கி நடக்க வேண்டிய படையேயாகும். இவையிரண்டுக்கும் உள்ள வித்தியாசம் சத்தியாக்கிரகியின் கட்டுப்பாடுகளில் சாதாரண ராணுவ வீரனின் வாழ்க்கையில் உள்ள ஆவேசத்திற்கு இடம் இல்லா மையினால் அதிக சிரமமானதாய் இருப்பது தான். சத்தியாக்கிரகிகளின் படை சிறிதும் ஆவேசம் இன்றி இருக்கவேண்டும். ஏனெனில் பழிக்குப் பழி வாங்கும் எண்ணம் அதற்குச் சிறிதும் கிடையாது. இதனால் அதில் ஒரு சிலர் இருந்தாலே போதும். கொடுமையை எதிர்த்து நியாயம் கொடுத்துள்ள போரில் நியாயத்திற்கு வெற்றி கிடைப்பதற்கு அந்தப் போரை எவ்விதக் குறையுமற்ற ஒரே சத்தியாக்கிரகி இருந்து நடத்தினாலே போதும். - யங் இந்தியா, 10.11.1921, பக்கம் 361-62

## 16. சத்தியாக்கிரகத்தில் உபவாசம்

சத்தியாக்கிரகியின் பாசறையில் உள்ள ஆயுதங்கள் அனைத்திலும் மிகுந்த ஆற்றல் வாய்ந்தது உபவாசமாகும். அதை எல்லோராலும் கையாள முடியாது. ஒருவர் உபவாசம் இருப்பதற்கு அவர் உடலில் நல்ல பலம் இருந்தால் மட்டும் போதாது. கடவுளிடம் உண்மையான நம்பிக்கையில்லாத போது உபவாசம் இருந்தும் பயன் இல்லை. கண்மூடித்தனமாகவோ பிறர் இருப்பதைப் பார்த்தோ நாமும் உபவாசம் இருப்பது அறவே கூடாது. மனப்பூர்வமாய் அதன் அவசியத்தை உணர்ந்தாலல்லது உபவாசம் இருக்கக் கூடாது. எனவே உபவாசம் மிகவும் அபூர்வமாகவே செய்யப்படும். - ஹரிஜன், 18.3.1939, பக்கம் 56

தூய முறையில் செய்யப்படும் உபவாசத்தில் சுய நலத்திற்கோ, கோபத்திற்கோ, நம்பிக்கையின்மைக்கோ, பொறுமையை இழப்பதற்கோ இடம் இராது. எல்லையில்லாத பொறுமையும், உறுதியான தீர்மானமும், தாம் ஏற்றுள்ள காரியத்திலேயே முழு மனதையும் செலுத்துதலும், சிறிதும் பதற்றம் இன்மையும், கோபமின்மையும் அவசியம் வேண்டும். ஒரு மனிதன் இந்தக் குணங்கள் அனைத்தையும் நினைத்த மாத்திரத்தில் பெறுவது சாத்தியமல்லவாகையால் அஹிம்சையின் விதிகளை அனுஷ்டிப்பதிலேயே தம் ஆயுளைச் செலவழித்துப் பழகாதவர் சத்தியாக்கிரக உபவாசம் இருக்கவே கூடாது.

- ஹரிஜன், 13.10.1940, பக்கம் 322

ஆனால் ஒரு விதியை மட்டும் நான் விளக்கிக் கூற விரும்புவேன். மற்ற எல்லா வழிகளிலும், எல்லா உபாயங்களையும் செய்து பார்த்துப் பயன்படாது போகையிலேயே இறுதி நடவடிக்கையாக சத்தியாக்கிரகி உபவாசம் செய்ய வேண்டும். ஒருவர் உபவாசம் இருப்பதைப் பார்த்துப் பிறரும் உபவாசம் இருப்பதற்கு அர்த்தமே இல்லை. உள்ளத்தில் போதிய பலம் இல்லாதவர் உபவாசம் பற்றிக் கனவிலும் எண்ணக்கூடாது; வெற்றி பெறுவோம் என்ற

எண்ணத்தில் உபவாசம் இருப்பதோ அறவே கூடாது .... கேலிக்கு இலக்காகக் கூடிய உபவாசங்கள் பிளேக் நோயைப் போல் பரவுகையில் அவற்றினால் தீங்கே விளையும். - ஹரிஜன், 21.4.1946, பக்கம் 93

உபவாசங்கள் உண்மையிலேயே பிறரை நிர்ப்பந்தப்படுத்துபவையாய் இருக்கலாம் என்பதில் சந்தேகமில்லை. சொந்த லாபம் கருதிச் செய்யப்படும் உபவாசங்கள் இத்தகையவையே. ஒருவரிடமிருந்து பணம் பறிக்கவோ அல்லது சொந்தக் காரியம் எதையோ செய்து தரச் சொல்லியோ செய்யும் உபவாசம் அவரை பலவந்தம் செய்தல் அல்லது அளவுக்கு அதிகமாய் அவர் மனதைப் பாதிக்க முயலுதல் என்றே சொல்லப்படும். இவ்வாறு எவரேனும் உபவாசம் செய்தால் அதற்கு சிறிதும் இடம் கொடாமல் எதிர்க்குமாறு நான் சிறிதும் தயங்காமல் சொல்வேன். என்னைத் தம் வழிக்குக் கொண்டு வருவதற்காக இவ்வாறு செய்யப்பட்ட உபவாசங்களை நான் எதிர்த்து சமாளித்திருக்கிறேன். சொந்த நலன் கருதிச் செய்யப்படும் உபவாசத்திற்கும் சொந்த லாபத்தைச் சிறிதும் கருதாமல் பொது நலனுக்காக செய்யப்படும் உபவாசத்திற்கும் உள்ள வேற்றுமையைப்புரிந்து கொள்வது சுலபமாயில்லையே யென்றால் அதற்கு நான் ஒரு யோசனை சொல்கிறேன். ஒருவர் தொடங்கியுள்ள உபவாசம் சொந்த லாபம் கருதியே செய்யப்படுவதாக உங்களுக்குத் தோன்றினால் நீங்கள் அதை அசட்டை செய்துவிட்டு உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போங்கள்; சிறிதும் விட்டுக் கொடாதீர்கள். இவ்வாறு செய்வதனால் உபவாசம் இருப்பவர் உயிரே போவதாயிருந்தாலும் நீங்கள் அதைப் பொருட்படுத்தக்கூடாது. மக்கள் மோசமான நோக்கங்களுக்காகச் செய்யப்படும் உபவாசங்களை அசட்டை செய்து பழகிவிட்டால் அந்த உபவாசங்களினால் யாரையும் எவ்வகையிலும் நிர்பந்தம் செய்யமுடியாது போய் விடும். உலகில் மக்களிடையே நடக்கும் எத்தனையோ காரியங்களைப் போல உபவாசங்களும் நல்ல நோக்கத்துடனும் செய்யப்படலாம், தவறான நோக்கத்துடனும் செய்யப்படலாம். - ஹரிஜன், 6.5.1933

ஒருவர் எவ்வளவு செல்வாக்கு உள்ளவராகவும் மதிப்பிற்குரியவராகவும் இருந்தாலும் நியாயத்திற்குப் புறம்பான ஒரு காரியத்திற்காக அவர் உபவாசம் இருக்க ஆரம்பித்தால் அவருடைய நண்பர்கள் சக ஊழியர்கள், உறவினர்கள் ஆகியோரின் கடமை அவர் உயிர் போனாலும் பாதகமில்லை என்று அவருக்கு ஆதரவளியாது இருந்து விடுவதே தவிர, அவர் உயிரைக் காப்பதன் மூலம் அவர் ஆதரித்து வரும் காரியம் பலம் பெற செய்வது அல்ல. மிகவும் தூய உபாயங்களும் அதனால் எய்தப் படவிருக்கும் லட்சியம் தவறானதாயிருக்கையில் மாசுற்று விடுகின்றன. - ஹரிஜன், 17.3.1946, பக்கம் 43

### துராக்கிரகம்

சில மாணவர்கள் பழைய அநாகரிகப் பழக்கமான தமக்கு வேண்டாத வர்கள் வீட்டு வாயிலில் போய் 'தர்னா' எனப்படும் முறையில் பிடிவாதமாக உட்கார்ந்து எழ மறுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். நான் இதை 'அநாகரிகப் பழக்க' மென்று குறிப்பிடுவது இது பிறரை தம் வழிக்குத் திருப்புவதற்கு உபயோகிக்கப்படும் பண்பற்ற முறையாய் இருப்பதனால்தான். இது கோழைகள் எடுக்கும் நடவடிக்கையும் ஆகும். காரணம், இவ்வாறு ஒருவர் வீட்டு வாயிலில் போய் அமருபவர் தம் தலையின் மீது ஏறி எவரும் மிதிக்க மாட்டார் என்று தெரிந்திருப்பதனால்தான் இவ்வாறு செய்கிறார் என்பது. இதை பலாத்காரமென்று அழைப்பது பொருந்தாதாயினும் அதை விட மோசமான தென்றே சொல்ல வேண்டும். நாம் இன்னொருவரை எதிர்த்துச் சண்டையிடுகையில் நாம் கொடுக்கும் ஒவ்வொரு அடிக்கும் பதிலடி கொடுக்க அவருக்கு வாய்ப்பாவது அளிக்கிறோம். ஆனால் என் தலையை மிதித்துக் கொண்டு போவென்று நாம் ஒருவரிடம் சொல்லும் போது அவர் அவ்வாறு செய்யமாட்டாரென்று நிச்சயமாய்த் தெரியுமாகையால் அவரை மிகுந்த சங்கடத்திற்குள்ளாக்கி, அவமானப்படுத்தவும் செய்கிறோம். மிகுந்த உற்சாகம் காரணமாக 'தர்ணா' செய்த அந்த மாணவர்கள் தாம் செய்வது எவ்வளவு அநாகரிகமான காரியம் என்பதை எண்ணிப் பார்க்கவில்லையென்று எனக்குத் தெரியும். ஆனால் தன் மனச்சாட்சியின் ஏவலின்படி நடக்க வேண்டுமென்றும், பேராபத்துக்களையும் தனித்து நின்றே சமாளிக்க வேண்டுமென்றும் எவரிடம் எதிர்பார்க்கப்படுகிறதோ அவர் யோசனையின்றி எதையும் செய்தல் கூடாது..... சகிப்பின்மையோ, அநாகரீகமோ, பிறரை அவமதித்தலோ, அளவுக்கு மீறி பிறரை நிர்ப்பந்தப்படுத்துதலோ கூடாது. நாம் உண்மையான ஜனநாயக முறையில் பழக விரும்பினால் நமக்கு சகிப்புத்தன்மை இல்லாதிருந்தால் கட்டி வராது. சகிப்பின்மை நாம் ஏற்றுள்ள காரியத்தில் நமக்கு நம்பிக்கையின்மையையே புலப்படுத்தும்.

- யங் இந்தியா 2.2.1921 பக்கம் 33

## 17. ஜனக்கும்பலின் அடாபிடித்தனம் (Mobocracy)

நாடு ஜனக்கும்பலின் அமளிக்குப் பணியாமல் ஒழுங்கான முறையில் முன்னேற வேண்டும் என்று நாம் விரும்பினால் மக்களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் செல்வதாகச் சொல்கிறவர்கள் அவர்கள் காட்டும் வழியில் தம்மால் செல்ல முடியாதென்று உறுதியாய் இருந்துவிட வேண்டும். 'நீங்கள் சொல்வது சரியல்ல' என்று சொல்லி தம் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதோடு நின்று, கும்பலின்

அபிப்பிராயத்திற்கு விட்டுக் கொடுத்தல் போதாதது மட்டுமல்ல, முக்கியமான விஷயங்களில் தம் அறிவுக்குப் பொருந்தாத விஷயங்களில் கூட்டத்தின் அபிப்ராயத்தை மீறியும் நடக்க வேண்டும். - யங் இந்தியா, 14.7.1910. பக்கம் 4

என்னைப்பற்றிய வரையில் ஜனக்கும்பலின் கோபத்திற்கு நான் அஞ்சும் அளவுக்கு எனக்கு அரசாங்கத்தின் கோபத்தினிடமும் அச்சமில்லை. ஜனக்கும்பலின் கோபம் என்பது நாட்டு மக்களைப்பற்றியுள்ள ஒரு நோயாயிருப்பதனால் அதை சமாளிப்பது ஒரு சிலர் கட்டுப்பாடாகச் சேர்ந்து நடத்தும் அரசாங்கத்தைச் சமாளிப்பதை விட அதிக சிரமமாகும். ஆட்சி நடத்துவதற்குத் தகுதியை இழந்து விட்ட ஒரு அரசாங்கத்தை வெளியேற்றுவது ஜனக்கும்பலுக்கு வந்துள்ள வெறியைப் போக்குவதை விட எவ்வளவோ சுலபம்.

- யங் இந்தியா, 28.7.1920. பக்கம் 3

ஜனக்கும்பலுக்கு மனம் என்று ஒன்று இல்லாமையாலும், முன்யோசனையில்லாமையாலும் பயிற்சி அளித்து அதைச் செயலில் ஈடுபடுத்துவதைப் போல் சுலபமானது வேறில்லை. அது ஆவேசத்திலேயே காரியம் செய்யும். பிறகு வெகு விரைவில் தன் செயல் குறித்து வருந்தவும் செய்யும். இதனாலேயே நான் இப்போது ஜனநாயகத்தை உருவாக்குவதற்கு ஒத்துழையாமையைப் பயன்படுத்தி வருகிறேன். - யங் இந்தியா, 8.9.1920, பக்கம் 5

தங்கமான உள்ளமும் நாட்டினிடம் பற்றும் கொண்டு தமக்குப் பயிற்சியளித்து வழிதுலக்கி அழைத்துப் போக வேண்டுமென்று காத்திருக்கும் மக்கள் திரளை நாம் பயிற்ற வேண்டும். இதற்கு நமக்கு ஒரு சில உண்மையான, அறிவுள்ள ஊழியர்கள் தேவை. அவர்கள் இருந்தால் நாடு முழுவதையும் புத்திசாலித்தனமாகக் காரியங்கள் செய்யும் வகையில் கட்டுப்பாட்டையும் ஒழுங்கையும் உண்டாக்கி விடலாம். அப்போது இப்பொழுதைய கும்பலின் அடாபிடியிலிருந்தே ஜனநாயகத்தைத் தோற்றுவிக்கலாம்.

- யங் இந்தியா 22.9.1920 பக்கம் 3

அரசாங்கத்தினாலோ மக்களினாலோ தோற்றுவிக்கப்பட்டுள்ள பயங்கர நிலையினிடையே நம்மால் ஜனநாயக மனோபாவத்தை அமைக்க முடியாது. சில அம்சங்களில் மக்கள் புரியும் பயங்கரச் செயல்கள் அரசாங்கத்தின் அடாபிடி நடவடிக்கைகளை விட ஜனநாயக மனோபாவத்திற்கு அதிகத் தீங்கு விளைவிக்கும். ஏனெனில் அரசாங்கத்தின் பயங்கரச் செயல்களினால் ஜனநாயக மனோபாவம் மேலும் உறுதிபெற, மக்கள் நிகழ்த்துபவையோ-அதைக் கொன்று விடுகின்றன.

யங் இந்தியா, 23.2.1921, பக்கம் 59

அரசாங்கத்தின் கட்டுப்பாடான பலாத்காரத்திலிருந்து நான் விலகி நிற்க

விரும்புகிறேன் என்றால் மக்களின் பலாத்காரத்தோடோ சிறிதும் தொடர்பு கொள்ள விரும்ப மாட்டேன். இவை இரண்டிற்குமிடையில் சிக்கி நசுக்கப்படுவதையே மேலென்று நினைப்பேன். - யங் இந்தியா, 24.11.1921 பக்கம் 382

தூய முறையில் நடக்கும் எந்த இயக்கத்திற்கும் தலைமைப் பொறுப்பேற்று நடத்திச் செல்வோர் அதில் மிகவும் யோக்கியமானவர்களையே பார்த்து பொறுக்கிச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

- "தென் ஆப்பிரிக்காவில் சத்தியாக்கிரகம்" (ஆங்கி.) பக் 218 பதி. 1928

## 18. ஜனநாயகத்தில் வேலை நிறுத்தங்கள்

நியாயம் பெறவேண்டி வேலை நிறுத்தங்கள் செய்வது தொழிலாளர்களுக்குள்ள இயல்பான, ஜீவாதார உரிமையாயினும் முதலாளிகள் வழக்கை மத்தியஸ்தத்திற்கு விட ஒத்துக் கொண்ட பிறகும் வேலை நிறுத்தங்களை நீடித்தல் குற்றமென்று கொள்ளப்பட வேண்டும். - யங் இந்தியா 5.5.1920 பக்கம் 6

வேலை நிறுத்தங்கள்' 'வேலை செய்ய மறுத்தல், 'ஹர்த்தால்' ஆகியவை மிகவும் அற்புதமானவையாகும். ஆனால் இவைகளைத் தவறாகப் பயன்படுத்து வதிலும் சிரமமில்லை. தொழிலாளிகள் தம்மை கட்டுப்பாடுள்ள தொழிலாளர் சங்கங்களாக அமைத்துக் கொள்ள வேண்டும். பிறகு என்ன ஆனாலும் அவர்கள் இந்தச் சங்கங்களின் அனுமதியின்றி வேலை நிறுத்தம் செய்யக்கூடாது.

- யங் இந்தியா 11.2.1920 பக்கம் 8

நியாயமான காரணங்களின்றி வேலை நிறுத்தமே செய்யக்கூடாதென்று சொல்லத்தேவையில்லை. அவ்வாறு செய்த வேலை நிறுத்தம் வெற்றி பெறக் கூடாது. அத்தகைய வேலை நிறுத்தங்களுக்கு பொது மக்கள் அனுதாபம் காட்டவே கூடாது. பொது மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களும், பட்சபாதைமில் லாதவர்களுமானவர்கள் அதை ஆதரித்தால் அல்லது ஒரு வேலை நிறுத்தம் நியாயமானதா அல்லவா என்பதைத் தெரிந்து கொள்ள பொது மக்களுக்கு வழியே இல்லை. ஒன்றின் நியாய அநியாயத்தை அதில் சம்பந்தப்பட்டவர்களால் கண்டு கொள்ள முடியாது. எனவே இருகட்சியினரும் ஒப்புக்கொள்ளும் மத்தியஸ்தரின் முடிவுக்கோ அல்லது நீதிமன்றத்தின் தீர்ப்புக்கோ விவகாரத்தை விட வேண்டும்.....

பொருளாதார மேம்பாடு கருதித் தொடங்கப்படும் வேலை நிறுத்தம் எதுவும் உள்ளுக்குள் அரசியல் நோக்கம் கொண்டதாயிருக்க கூடாது. இவ்வாறு இரண்டையும் கலப்பதனால் அரசியல் நோக்கம் ஒரு பொழுதும் கை கூடாததோடு, அநேகமாய் அதனால் பொது வாழ்க்கை குழப்பத்திற்குள்ளாகாவிட்டாலும், தபால்

ஊழியர்களைப் போன்ற பொதுநல ஊழியர்கள் நடத்தும் வேலை நிறுத்தத்தினால் அவர்களுக்கே தீங்குதான் விளைகிறது. இத்தகைய வேலை நிறுத்தங்கள் நியாயமான பிறவழிகள் அனைத்திலும் முயன்று பயனில்லாது போன பிறகே நடக்கலாம். - ஹரிஜன் 11.8.1946 பக்கம் 256

பாதிக்கப்பட்டவர்கள் தம்மிடமிருந்த எல்லா உபாயங்களையும் செய்து பார்த்துப் பயனில்லாது போன பிறகே வேலை நிறுத்தம் தொடங்கினார்கள் என்பது சிறிதும் ஐயத்திற்கிடமில்லாமல் நிருபணமாகும் சந்தர்ப்பங்களில் அல்லது அவர்களோடு சேர்ந்து அனுதாப வேலை நிறுத்தம் செய்வது கூடாது.

- ஹரிஜன் 11.8.1946 பக்கம் 256

அரசியலில் வேலை நிறுத்தங்களை பிரத்தியேகமாக தக்க காரணங்களுக்காக நடத்த வேண்டுமே தவிர அவைகளை பொருளாதாரக் காரணங்களுக்காக நடக்கும் வேலை நிறுத்தங்களோடு கலப்பதோ இணைப்பதோ சரியல்ல. அஹிம்சைப் போராட்டத்தில் அரசியல் வேலை நிறுத்தங்களுக்கு ஒரு நிச்சயமான இடம் உண்டு. அவை முன் யோசனையின்றி தோன்றிய பொழுதெல்லாம் ஆரம்பிக்கப்படுவதில்லை. அதில் ஒளிவு மறைவுகளுக்கே இடமில்லை. அதை நடத்தும் பொறுப்பை காவாலிகளின் கையில் ஒப்புவிக்க கூடாது. என்னாவானாலும், எந்த நிலைமையிலும் பலாத்காரத்தில் போய் முடியாது என்ற உறுதியில்லாத போது அவைகளைத் தொடங்கக் கூடாது

- ஹரிஜன் 18.11.1926 பக்கம் 256

எந்த வேலை நிறுத்தமும் தொழிலாளர் தாமே முன்வந்து நடத்துவதாயிருக்க வேண்டுமே தவிர, பிறர் ஏவலால் வேண்டுமென்றே நடத்தப்படுவதாயிருக்கக்கூடாது. வெளி நிர்ப்பந்தம் இன்றி அவர்களே நடத்துவதாயிருந்தால் அதில் கூண்டாக்கள் புகுந்து கொள்ளை முதலியன நடத்துவதற்கு வாய்ப்பிராது. அத்தகைய வேலை நிறுத்தம் அதை நடத்துவோரின் முழு ஒத்துழைப்போடு நடத்தப்படுவதாயிருக்கும். அது அமைதியாய் நடக்கவேண்டியதோடு அதில் பலாத்காரம் புகுவதற்குச் சிறிதும் இடமிருக்கக் கூடாது. - ஹரிஜன் 2.6.1946 பக்கம் 158

போக்கப்பட வேண்டிய சிரமங்கள் இருந்து, அதன் பொருட்டு சாத்துவிகமான வேலை நிறுத்தம் நடத்தப்படுகையில் அதில் சம்பந்தப்பட்டவர்கள் மட்டுமே கலந்து கொள்ள வேண்டும். - யங் இந்தியா 18.11.1926 பக்கம் 400

முறை தவறாது ஒழுங்காக நடந்துவரும் ஜனநாயக சமுதாயத்தில் சட்டத்தை மீறவோ, வேலை நிறுத்தங்கள் செய்யவோ இடமில்லை; அதற்கு சந்தர்ப்பமே இராது. அத்தகைய சமுதாயத்தில் நியாயத்தை நிலை நிறுத்துவதற்கு

சட்டம் ஒப்பும் வழிகள் எத்தனையோ இருக்கின்றன. அதில் மறைமுகமாகவோ, வெளிப்படையாகவோ பலாத்காரம் தலையெடுக்கவே இடமில்லை. கான்பூரிலும், நிலக்கரிச் சுரங்கங்களிலும் பிற இடங்களிலும் வேலை நிறுத்தம் நடந்தது என்றால் தொழிலாளர்கள் உள்ளிட்ட சமுதாயம் முழுவதற்கும் அவைகளினால் மிகுந்த பொருள் நஷ்டம் ஏற்பட்டது. இது வரையில் எத்தனையோ வேலை நிறுத்தங்கள் நடத்தி வெற்றி பெற்றுள்ள என்னைப் போன்ற ஒருவன் வேலை நிறுத்தத்தை எதிர்த்துப்பேசுவது நன்றாயில்லையென்று என்னிடம் எவரும் சொல்ல வேண்டாம். இவ்வாறு சொல்வோர் எவரேனுமிருந்தால் அவர் "அந்தக் காலத்தில் நமக்கு சுதந்திரமும் வரவில்லை, இப்பொழுது போல் சட்டங்களும் இருந்ததில்லை" என்பதை மறவாதிருக்கட்டும். மேலை நாடுகளிலும் கீழை நாடுகளிலும் அரசியல் உலகை இப்போது பற்றிக்கொண்டு வாட்டும் அதிகார அரசியல் நோயும், பதவிமோகமும் என்றேனும் நம்மைவிட்டு நீங்குமா என்றே எனக்குத் தெரியவில்லை.

26.1.48 அன்று புதுதில்லி பிர்லா மாளிகையில் ஆற்றிய பிரார்த்தனை உரையிலிருந்து. - ஹரிஜன் 1.2.1948 பக்கம் 15

## 19. யந்திரத் தொழில்களின் தீமைகள்

இந்தியாவில் நம் கண்ணில் படும் ஒவ்வொரு அரண்மனையும் நாட்டின் பொருள் வளத்தை அல்ல, இந்தியாவின் கோடிக்கணக்கான எளிய மக்கள் அரை வயிற்றுக் கஞ்சிக்காக உழைத்துப் பாடுபட்டதன் விளைவாய் ஒரு சிலரிடம் சேர்ந்துள்ள பணம் தந்த சக்தியின் திமிரையே காட்டுகிறது.

- யங் இந்தியா 28.4.1927 பக்கம் 137

தொழில்களை யந்திரமயமாக்கும் மேனாடுகளின் வழியே செல்லாது இந்தியாவை கடவுள் காப்பாராக. ஒரு சிறிய தீவின் (இங்கிலாந்தின்) பொருளாதார ஏகாதிபத்தியம் இன்று உலகத்தையே தனக்கு அடிமைப்படுத்தியிருக்கிறது. 30 கோடி மக்களைக் கொண்ட ஒரு நாடு இதே வகையில் பிற நாடுகளைச் சுரண்ட ஆரம்பித்தால் அது பூச்சி விழுந்து பயிரை அழிப்பதுபோல் உலகின் செல்வம் முழுவதையும் பறித்துக் கொண்டு விடும். இந்திய முதலாளிகள் இந்தப் பேராபத்து நேராதிருப்பதற்கு தாம் இந்திய மக்களின் தர்மகர்த்தாக்களாகி, தம் திறமையை தமக்காகப் பணம் சேர்த்துக் குவிப்பதற்காக அன்றி, தார்மீக புத்தியுடன் ஏழை மக்களின் உதவிக்காகச் சேர்த்தாலல்லது அவர்கள் அந்தப் பொது மக்களை யெல்லாம் அழித்தோ அல்லது அவர்களால் தாம் அழிவுற்றோ முடிந்து போவார்கள்.

- யங் இந்தியா 29.12.1928 பக்கம் 422

மேலை நாடுகளின் நாகரீகம் நகரங்களில் வளர்ந்தது. இங்கிலாந்தையோ இத்தாலியையோ போன்ற சிறிய நாடுகள் தாம் செய்யும் எல்லாவற்றையும் நகரங்களை மையமாகக்கொண்டு செய்யலாம். ஜனத்தொகை அதிகமில்லாத அமெரிக்காவைப் போன்ற பெரிய நாடும் வேறெதுவும் செய்ய முடியாதிருக்கலாம். ஆனால் மிகுந்த ஜனத்தொகையும் நீண்ட காலமாக வந்துள்ளதும், தன் தேவைகளுக்குப் போதியதாய் இருந்திருப்பதுமான கிராம நாகரிகத்தில் ஊறிய ஒரு நாடு மேலை நாடுகளைப் பின்பற்றத் தேவையில்லை என்றே எவரும் நினைப்பார். குறிப்பிட்ட ஒரு நிலையில் உள்ள ஒரு நாட்டிற்கு நல்லதாயிருப்பது வேறு நிலையில் உள்ள இன்னொரு நாட்டிற்கும் அதே போன்று நன்மை பயக்கும் என்று சொல்வதற்கில்லை. ஒருவனுக்கு அமுதாயிருப்பது இன்னொருவனுக்கு விஷமாவது இயல்பு. ஒரு நாட்டின் பூகோள அமைப்புக்கு அதன் பண்பாட்டை உருவாக்குவதில் பெரும் பங்கு உண்டு. துருவப் பிரதேசங்களில் வாழும் ஒருவனுக்கு கம்பளிச் சட்டை இன்றியமையாததாயிருக்க, பூமத்திய ரேகைப் பிரதேசத்தில் வாழ்வோரை அது மூச்சுத்திணற அடித்துவிடும். - யங் இந்தியா 25.7.1929, பக்கம் 244

எந்த நாட்டிற்கும் எந்த நிலைமையிலும் தொழில்களை எந்திரமயமாக்குதல் அவசியம் என்று நான் நினைக்கவில்லை. இந்தியாவுக்கோ அந்தத் தேவை இன்னும் குறைவு. சுதந்திர இந்தியா மூச்சுத் திணறித் திண்டாடிக் கொண்டிருக்கும் உலகிற்கு தன் கடமையைச் செலுத்துவதென்றால் தனது ஆயிரக்கணக்கான குடிசைகளில் வாழும் மக்களின் வாழ்க்கையை வளப்படுத்துவதனாலும், உலகோடு சமாதானமாக வாழ்வதனாலும் தான் செலுத்த முடியும் என்று நான் நம்புகிறேன். பணத்தை தெய்வமென்று கொண்டுள்ள வாழ்க்கை முறையில் தலைதெறிக்க ஓடும் சிக்கலான பொருளாதாரத்திற்கும் சீரிய சிந்தனைக்கும் பொருந்தாது. நாம் சீரிய முறையில் வாழக் கற்றுக்கொள்கையில் தான் நம் வாழ்வில் அழகு பொருந்திப் பொலியும். - ஹரிஜன் 1.9.1946 பக்கம் 285

**வகுப்பு போராட்டம் தவிர்க்க முடியாததல்ல**

முதலாளிகள் தொழிலாளர்கள் ஆகிய இருவரின் நலன்களுக்கிடையே முரண் இருந்தாலும் நாம் தம் கடமையைச் செய்து அதைப் போக்கியாக வேண்டும். உடலில் நல்ல இரத்தம் ஓடுகையில் அதில் நோய்க் கிருமிகள் புக முடியாததைப் போல தொழிலாளர் தூயமுறையில் நடந்து கொண்டால் அவர்களைப் பிறர் சுரண்ட மாட்டார்கள். தொழிலாளி தான் செய்யும் வேலையும் பணமே, முதலே என்று உணர்ந்தால் போதும். தொழிலாளருக்கு நல்ல கல்வியளித்து, அவர்களிடையே கட்டுப்பாட்டை உண்டாக்கி, அவர்கள் தம் பலத்தை உணர்ந்ததும் அவர்களை எவ்வளவு முதலாளிகள் சேர்ந்தாலும் அடக்கி ஆள முடியாது. கல்வியும் கட்டுப்பாடும் உள்ள தொழிலாளர்கள் தமக்கு இஷ்டமான கூலியைக் கேட்டுப்

பெறலாம். தமக்கு பலமில்லாமையினால் இன்னொருவரை பழிவாங்க பிரதிக்ஞை பூண்டு பயினில்லை. நாம் தெம்பு பெற்றாக வேண்டும். உறுதியுள்ள உள்ளங்களும், விஷயங்களை அறிந்த மனமும், உழைக்கச் சித்தமாயுள்ள கைகளும் மட்டும் இருந்தால் எந்தக் கஷ்டத்தையும் சமாளித்து, எல்லாத் தடைகளையும் அகற்றிக் கொண்டுவிட முடியும். ‘உன் அயலானையும் நீ உன்னைப் போலவே நினைத்து நேசி’ என்று சொல்லியிருப்பது காரிய சாத்தியமில்லாத வெறும் உபதேசமல்ல. முதலாளி எப்படி தொழிலாளிக்கோ, அப்படியேதான் தொழிலாளி முதலாளிக்கு அண்டை வீட்டுக்காரனைப் போன்றவனாகையால் ஒருவன் மற்றவனின் மனப்பூர்வமான உதவியை நாடிப்பெற வேண்டும். இந்த விதிக்கு சிறிதும் எதிர்க்காமல் சுரண்டப்படுவதற்கு உடன்பட வேண்டுமென்று அர்த்தமல்ல. நம்மிடையேயுள்ள கட்டுப்பாட்டின் பலம் எவரும் நம்மைச் சுரண்ட முடியாது செய்துவிடும்.

- ஹரிஜன் 1.3.1935 பக்கம் 23

நான் பெரிய ஜமீன்தார்களையெல்லாம் அழிக்க விரும்பவில்லை. ஆனால் ஜமீன்தார்கள் இருந்தே ஆக வேண்டும் என்றும் எனக்குத் தோன்றவில்லை ...... ஜமீன்தார்களையும் பிற முதலாளிகளையும் சாத்துவிக முறையில் நம் வழிக்குத் திருப்பிவிடலாம் என்று எண்ணுவதால் வகுப்புப் போராட்டம் நடந்தே தீரும், அதைத் தவிர்க்க முடியாதென்று நான் நினைக்கவில்லை. ஏனெனில் அஹிம்சையின் ஒரு முக்கியமான அம்சம் மிகவும் குறைந்த எதிர்ப்பைத் தோற்றுவிக்கும் வழியில் செல்வதாகும். நிலத்தை உழுது பயிரிடும் விவசாயிகள் தம் சக்தியை உணர்ந்த மாத்திரத்தில் நில முதலாளிகளின் கொடுமை தானே நீங்கிவிடும். அவர்கள் தம் உணவுக்கும் உடைக்கும், தம் குழந்தைகளின் கல்விக்கும் போதுமான ஊதியம் தந்தாலல்லது தம்மால் வேலை செய்ய முடியாது என்று சொல்லிவிட்டால், பாவம், அந்த ஜமீன்தாரியினால் என்ன செய்ய முடியும்? உண்மையில் பாட்டாளிதான் அவன் உற்பத்தி செய்யும் பொருளுக்கு உரிமையாளன். அவர்கள் புத்திசாலித்தனமாக ஒன்று சேர்ந்தால் அவர்களை எவராலும் எதிர்க்க முடியாது. இதனால்தான் அவர்களிடம் வகுப்புப் போராட்டத்திற்கு அவசியமே இராது என்று நான் சொல்கிறேன். அது வந்தே தீரும், அது நடந்தாலொழிய விமோசனம் இல்லை என்று நான் நினைத்தால் அதற்காக பிரச்சாரம் செய்யவும், அதை எல்லோருக்கும் போதிக்கவும் தயங்க மாட்டேன்.

- ஹரிஜன், 5.12.1936, பக்கம் 338-39

அஹிம்சையில் தேவையான பயிற்சியில்லாத போது தொழிலாளர் தமக்குள்ளே சண்டையிட்டுக் கொண்டிருப்பார்கள்; இதனால் தம்மிடம் பொதிந்துள்ள சக்தியை புரிந்து கொள்வதற்கு வேண்டிய தெம்பை வளர்த்துக் கொள்ள ஒருபொழுதும் இயலாது போய்விடும். அடிப்படைத் தத்துவமான அஹிம்சையை

ஏற்றுக் கொண்டதும் கட்டுப்பாடு, ஒழுங்குமுறை, தொழில் திறன் ஆகியவையும் பிறவும் அவர்களிடம் தாமே வந்து சேரும்; வகுப்புக்களிடையே இருக்கவேண்டிய கூட்டுறவும் ஒருவர் மற்றவரைக் கலந்து கொண்டு வேலை செய்யும் திறனும் தொடர்ந்து வரும். எண்ணிக்கையில் அதிகமாய் இருந்தும் அவர்கள் முதலாளிகளின் தயவில் தாம் இருப்பதாய் எண்ணி, உற்சாகத்தை இழந்து வருந்துகிறார்கள். இதற்குக் காரணம் அவர்களுக்குத் தம்மிடம் இயல்பாய் அமைந்துள்ள பலம் தெரியாததுதான். இல்லாவிட்டால் அவர்கள் எல்லோரும் சேர்ந்து தம்மிடம் உள்ள மூலதனம், ஆள் பலம் ஆகியவற்றை ஒன்று சேர்த்து 'இப்போது முதலாளிகள் தம் இஷ்டம் போல் இவர்களை ஆட்டி வைக்கிறார்களே', அவ்வாறு இவர்கள் அவர்களை ஆட்டி வைப்பதை யார் தடுக்கிறார்கள்? தொழிலாளர் உணர்ந்து கொள்ள வேண்டியது, உலோகத்தினாலான பணம் எவ்வாறு மூலதனம் தான் என்பதே. இந்த உணர்வு அஹிம்சையை ஏற்றுக் கொண்டாலல்லது அவர்களுக்கு வராது.

ஆனால் இந்த உணர்வு வந்து தம் உரிமையைப் பெற்றான பிறகும் அவர்களுக்கு அஹிம்சை தேவையில்லாது போகாது. அஹிம்சைக்கு விடை கொடுத்து அனுப்பி விடுவார்களானால் அவர்கள் முதலாளிகளைப் போலவே மோசமான நிலையை எய்தி தாமும் பிறரைச் சுரண்டத் தொடங்கிவிடுவார்கள். தம் பலத்தை உணர்வதோடு, அஹிம்சையிலும் உறுதியாயிருப்பார்களானால் அவர்களால் முதலாளிகளுடன் ஒத்துழைத்து, அவர்களையும் நன்கு பயன்படுத்த முடியும். அப்போது தமக்கும் முதலாளிகளுக்கும் ஏதோ முரண் இருப்பதாய் அது வரை இருந்த எண்ணத்தை விட்டு விடுவார்கள். ஆலைகளையும் அங்கே உள்ள யந்திரங்களையும் தம்மைச் சுரண்டுவதற்காக முதலாளிகள் வைத்துள்ள கருவிகள் என்றும், அவற்றின் உதவியால் அவர்கள் தம்மைக் கசக்கிப் பிழிகிறார்கள் என்றும் எண்ணாமல் அவற்றைப் பொருளுற்பத்திக்குதவும் கருவிகளாக மதித்து, தம் சொத்தைப் போலவே கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாப்பார்கள்; வேலைக்குச் சுணங்காமலும், வேலையைக் குறைத்துச் செய்ய முயலாமலும் தம்மால் இயன்ற அளவு பாடுபட்டு உழைப்பார்கள். உண்மையில் முதலாளிகளும் தொழிலாளிகளும் ஒருவர் மற்றவரின் நலன்களின் தர்மகர்த்தாக்களாக இருப்பதோடு, இரு சாராருமே பொருள்களை வாங்கி உபயோகிக்கும் மக்களின் நலன்களுக்கும் தர்ம கர்த்தாக்களாக இருப்பார்கள். தர்மகர்த்தா தத்துவம் ஒரு சாராருக்கே உரியது அல்ல. தர்ம கர்த்தாவாயிருப்பவன் மற்றவர்களைவிட உயர்ந்தவன் என்பதும் அல்ல. நான் இது வரையில் விளக்கியபடி தர்மகர்த்தா தத்துவம் எல்லோரும் ஒருவர் மற்றவர் நலனைக் கருதிப் பின்பற்ற வேண்டிய ஒன்று. அதில் ஒவ்வொருவரும் பிறர் நலனைத் தாம் பாதுகாப்பதால் தம் நலனுக்கு சிறந்த பாதுகாப்பு ஏற்படுகிறது

என்று நம்புகிறார்கள். "நீங்கள் கடவுளுக்குக் காணிக்கை செலுத்துங்கள். கடவுளர் உங்கள் மீது அருளைப் பொழிவர். இவ்வாறு ஒருவர் மற்றவருக்கு காணிக்கை செலுத்தியும், அருளைப் பெற்றும் எல்லோரும் நன்றாய் வாழுங்கள்" என்று பகவத்கீதை கூறுகிறது. கடவுள் படைப்பில் கடவுளர் என்று தனியே ஓர் இனம் இல்லை. பொருளுற்பத்தித் திறன் உடையவர்களாய், அந்தத் திறனை சமூகத்தின் நலனுக்காகப் பயன்படுத்துவோர் எல்லோரும் கடவுளரே, ஆகையால் முதலாளிகளும் கடவுளர் தாம், தொழிலாளர்களும் அவர்களுக்குக் குறைந்த கடவுளர் அல்லர்.

- ஹரிஜன், 25.6.1938, பக்கம் 161-62

## 20. பொருளாதார ஏற்றத்தாழ்வுப் பிரச்சினை

பொதுவில் தனவந்தர்கள் - அவர்கள் மட்டுமென்ன, பெரும்பாலான மனிதர்கள் - எப்படியேனும் பணம் சேர்த்தால் போதும் என்று எண்ணுகிறார்களே தவிர, அது வரும் வழியைப் பற்றி யோசிப்பதேயில்லை என்ற கருத்தை ஆமோதிக்க நான் தயங்கவில்லை. அஹிம்சை முறையைப் பயன்படுத்துகையில் மிகவும் மோசமான மனிதனையும் தக்க முறையில் அன்போடும் அனுதாபத்தோடும் முயன்றால் திருத்திவிடலாம் என்பதை நாம் நம்ப வேண்டும். நாம் ஒவ்வொரு மனிதனிடம் உள்ள நல்ல அம்சத்தைக் கருத்தில் கொண்டு விஷயத்தை எடுத்துச் சொன்னால் நாம் சொல்வது அவர்கள் மனத்தில் உறைக்கவே செய்யும். சமூகத்திலுள்ள ஒவ்வொரு மனிதனும் தாம் பணக்காரனாவதற்கன்றி மக்கள் அனைவரின் நன்மைக்காக தம் திறன் முழுவதையும் உபயோகிப்பதனால் சமூகம் நன்மையுறாதா? நாம் ஒவ்வொருவரும் நம்மால் எவ்வளவு முடியுமோ முயன்று, சக்தி முழுவதையும் உபயோகித்துப் பாடுபட வேண்டுமென்று எண்ணுகிறோமே தவிர எல்லோரையும் உயிரும் உணர்ச்சியும் அற்ற சமநிலை எய்தும்படி செய்ய விரும்பவில்லை. அவ்வாறு சமமாக்கப்பட்ட சமூகம் இறுதியில் அழிந்து போகும். இதனால் நான் தனவந்தர்களுக்குச் சொல்லும் யோசனை, அவர்கள் தாராளமாக கோடிக்கணக்கில் பணம் சேர்த்துக் குவிக்கட்டும்; ஆனால் அதை நியாயமான வழியிலேயே செய்ய வேண்டும்; அவ்வாறு சேர்த்த பணத்தை மக்களனைவரின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்பது. இதே கருத்தை வெளியிடும் "தேனத்யக்தேன புஞ்ஜீதா:" (அதை பிறருக்களித்து நீங்களும் நுகருங்கள்) என்ற அசாதாரணமான அனுபவமும் அறிவும் பெற்றவரால் அளிக்கப்பட்டுள்ள மந்திரம் கூறுகிறது. இப்போது ஒவ்வொருவரும் அண்டை வீட்டில் உள்ளவன் என்ன ஆனான் என்பதையே கவனியாமல் தான் வாழ்ந்தால் போதும் என்று இருக்கிறார்களே, இந்த முறையை மாற்றி எல்லோரும் வாழ வகை

செய்வதற்குள்ள ஒரே வழியாகும் இது. - ஹரிஜன், 1.2.1942, பக்கம் 20

உலக வரலாற்றில் இவ்வாறு நடப்பதற்கு ஏற்ப மனித சுபாவம் மாறியதாக எங்கேனும் கூறப்பட்டிருக்கிறதா என்று கேட்கலாம். இத்தகைய மாற்றங்கள் தனி மனிதர்கள் வாழ்க்கையில் நிச்சயமாக நிகழ்ந்திருக்கின்றன; இவை ஒரு சமூகம் முழுவதிலும் நிகழ்ந்ததற்கு உதாரணங்கள் தர முடியவில்லை. இதற்குக் காரணம், இது வரையில் அஹிம்சைத் தத்துவத்தில் இந்த அளவுக்குப்பெரிய பரிசோதனை செய்து பார்க்கப்படாதது தான். என்ன காரணத்தினாலோ அஹிம்சையை தனி மனிதர்களால்தான் கையாள முடியுமாகையால் அதோடு நிறுத்திக்கொள்ள வேண்டுமென்ற தவறான நம்பிக்கை நம்மை பற்றிக்கொண்டு விட்டது. உண்மையில் அப்படி ஒன்றும் இல்லை. அஹிம்சை, சமூகமும் உபயோகிக்கக் கூடியதே; சமூகத்திற்கும் அது பயன்படக் கூடியது தான். இந்த விஷயத்தை மக்களுக்கு எடுத்துச் சொல்லி நம்பச்செய்யவே நான் பாடுபடுகிறேன். நான் செய்யும் பரிசோதனைகளுக்கெல்லாம் இதுவேதான் நோக்கம். அற்புதங்கள் நிகழ்த்தப்படும் இந்தக் காலத்தில் ஒரு கருத்து புதிதாய் இருப்பதனாலேயே அதை எவரும் உபயோகம் இல்லாதது என்று சொல்லித் தள்ளிவிட மாட்டார்கள். ஒன்று சிரமசாத்தியமாயிருப்பதனாலேயே அதைச் செய்வதற்கில்லை என்று சொல்வதும் இக்காலத்தின் போக்குக்குப் பொருந்துவதல்ல. நடக்கும் என்று எவரும் கனவிலும் எண்ணாதவைகளும் நம் கண் முன் நடப்பதைப் பார்க்கிறோம்; அசாத்தியமான தென்று கருதப்பட்டவையெல்லாம் சாத்தியமாகிக் கொண்டு வருகின்றன. ஹிம்சைத் துறையில் அடிக்கடி புதிதாகத் தோன்றும் கண்டுபிடிப்புகளைப் பற்றிக் கேட்டு வியப்பில் ஆழ்ந்து போகிறோம். ஆனால் இவைகளை விட இன்னும் அற்புதமானவையும், எவரும் எண்ணிப் பார்த்திராதவையும், அசாத்தியமென்று தோன்றுபவையுமான கண்டுபிடிப்புகள் அஹிம்சைத் துறையில் தோன்றிப் போகின்றன என்று நான் உறுதியாய் நம்புகிறேன். உலகச் சமயங்களின் வரலாறுகளில் இவ்வாறு நிகழ்ந்துள்ள அற்புதங்களுக்குக் கணக்கே இல்லை. சமூகத்திலிருந்து சமயத்தைக் களைந்தெறிவதற்குச் செய்யும் முயற்சி என்றும் நிறைவேறக் கூடியதல்ல. அம்முயற்சி வெற்றி பெறுமானால் அதற்கு சமூகமே அழிந்து போகும் என்றுதான் அர்த்தம். குருட்டு நம்பிக்கைகளும், தீய பழக்கங்களும் பிற குறைபாடுகளும் ஒவ்வொரு காலத்திலும் வந்து புகுந்து சமயத்தை மாசுபடுத்துகின்றன. அவை வருவதும் போவதுமாய் இருப்பவை, ஆனால் சமயம் மட்டும் என்றும் இருந்துவரும். ஏனெனில் உலகம் இருப்பதே பரந்த பொருளில் சமயம் நிலைத்திருப்பதையே பொறுத்திருக்கிறது. சமயம் என்பதற்கு நாம் இறுதியாக அளிக்கக்கூடிய விளக்கம் கடவுளின் நியதிக்கு அடங்கி நடப்பது என்பதுதான். கடவுள் வேறு, அவர் நியதி வேறு என்பதல்ல.

அவையிரண்டும் ஒரே பொருளுள்ள இரு சொற்களே. எனவே கடவுள் என்பதற்கு என்றும் மாறாமல் இருந்துவரும் நியதி என்பதுதான் பொருள். கடவுளை இதுவரையில் உண்மையில் எவரும் கண்டதில்லை, ஆனால் தம் தவத்தின் மூலமாக அவதார புருஷர்களும் மகான்களும் என்றுமுள்ள கடவுளின் நியதியை நாம் இலகுவில் உணருமாறு செய்திருக்கிறார்கள்.

நாம் எவ்வளவோ முயன்றும் தனவந்தர்கள் ஏழை மக்களின் உண்மையான பாதுகாப்பாளராய் ஆகாமலிருந்து, ஏழை எளியோர் மேன்மேலும் கொடிய முறையில் நசுக்கப்பட்டு பட்டினியால் சாக நேர்ந்தால் என்னதான் செய்வது என்று கேட்கலாம். இந்தப் புதிருக்கு விடை காணும் முயற்சியினிடையிலேயே இதற்கு ஒத்துழையாமையும் சாத்துவிகச் சட்ட மறுப்பும் மிகவும் சரியான, பிழைபடாத சாதனங்கள் என்பதைக் கண்டுபிடித்தேன். சமூகத்திலுள்ள ஏழை மக்களின் உதவியின்றி தனவந்தர்களால் பணத்தைச் சேர்த்துக் குவிக்க முடியாது. மனிதன் இப்பொழுதைய பலம் பெற்றதே அவன் சுபாவத்தில் ஆரம்பம் முதல் கலந்துள்ள மிருகத்தன்மையிலிருந்தாகையால் அவனுக்கு பலாத்காரத்தில் நல்ல பழக்கம் உண்டு. நான்கு கால்களால் ஊர்ந்த மிருகநிலை மாறி இரு கால்களை ஊன்றி நிற்கும் மனிதனாக மாறிய போதுதான் அஹிம்சையின் ஆற்றல் அவனுக்குத் தெரியவந்தது. இந்த அறிவு அவன் உள்ளே சிறிது சிறிதாக வளர்ந்து கொண்டே வந்திருக்கிறது. இந்த அறிவு ஏழை மக்களிடையிலும் இடம்பெற்றுப் பரவுமானால் அவர்கள் பலமுள்ளவர்களாகி, அஹிம்சையின் உதவியினால் தம்மை விடுவித்துக் கொள்ளும் வழியை உணருவார்களாகையால், இப்போது பட்டினியால் சாகும் நிலைக்குத் தம்மைக் கொண்டுவந்து அமுக்கிக்கொண்டிருக்கும் ஏற்றத்தாழ்வுகளிலிருந்து விடுதலை பெறும் வழியைத் தெரிந்து கொள்வார்கள்.

- ஹரிஜன், 25.8.1940, பக்கம் 260-61

சமூகமானதோ வேறு எவ்வகையானதோ ஆன சர்வாதிகாரத்தை என்னால் ஏற்றுக்கொள்ளவே முடியாது. பணக்காரர்களெல்லாம் ஒழிந்து போவதோ, அவர்கள் ஏழை எளியோரைப் பாதுகாப்பதோ நடக்கக் கூடியது அல்ல. ஒரு சில தனவந்தர்கள் நிச்சயமாய் கொல்லப்படுவார்கள்; ஒரு சில ஏழைகள் தனவந்தர்களின் இனம் என்ற ஒன்று இருக்கத்தான் போகிறது. சமூகமானதென்று சொல்லப்படும் சர்வாதிகாரத்திலும் ஏழைகளும் இருக்கத்தான் போகிறார்கள். எல்லோருக்கும் உண்மையான கல்வி அளிப்பதன் மூலம், அதாவது அஹிம்சை முறையில் இயங்கும் ஜனநாயகம் ஒன்றுதான் எல்லாவற்றுக்கும் சரியான பரிகாரம், பணம் படைத்தவர்கள் ஏழை மக்களின் பாதுகாப்பாளர் ஆகவும், ஏழைகள் தம் கையே தமக்குதவி என்பதை அறிந்து வாழவும் பயிற்றப்பட வேண்டும்.

- ஹரிஜன், 8.6.1940, பக்கம் 159

ஏழைகள் சுரண்டப்படுவதை ஒரு சில கோடீசுவரர்களை ஒழித்துக் கட்டுவதனால் நிறுத்த முடியாது. அதற்குள்ள ஒரே வழி ஏழைகளின் அறியாமையைப் போக்கி, அவர்களுக்கு தம்மைச் சுரண்டுவோருடன் ஒத்துழைக்க மறுக்கக் கற்றுக் கொடுப்பதுதான். இதைச் செய்தால் சுரண்டுவோரும் திருந்தி விடுவார்கள். இதனால் இறுதியில் இருவருமே சமப்பங்காளிகள் ஆகிவிடுவார்கள் என்று கூட நான் சொல்லியிருக்கிறேன். பணம் அல்லது மூலதனத்திலேயே தீமை எதுவுமில்லை. அதைத் தவறாகப் பயன்படுத்துவதனால்தான் எல்லாத் தீமைகளும் வருகின்றன. ஏதோ ஒரு வகையில் மூலதனம் எப்பொழுதும் தேவையாகத்தானிருக்கும். - ஹரிஜன். 28.7.1940, பக்கம் 219

## 21. முதலாளிகள் செய்யவேண்டுவது

இந்திய சமுதாயம் அமைதியான முறையில் உண்மையான முன்னேற்றம் எய்தவேண்டுமானால் பணம் படைத்தவர்கள் தம்மைப் போலவே தம் குடியானவனுக்கும் ஆன்மா இருக்கிறது, தம்மிடம் பணம் இருப்பதனால் தாம் அந்த ஏழையை விட உயர்ந்தவராகிவிடமாட்டோம் என்பதை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். ஜப்பானியப் பிரபுக்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, அவர்கள் தமக்கடங்கி உள்ள குடியானவர்களின் நலனுக்காகவே, பாதுகாப்புக்காகவே தாம் செல்வம் வைத்திருப்பதாக எண்ணிக் கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால் தம் உழைப்புக்குக் கூலியாக நியாயமான ஒரு தொகைக்கு அதிகமாய் அவர்கள் எதையும் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். இப்பொழுதோ அவர்கள் செய்யும் சிறிதும் தேவையில்லாத ஆடம்பரத்திற்கும் வீண் செலவுகளுக்கும் எந்த ஏழை மக்களிடையில் அவர்கள் இருந்து வருகிறார்களோ அவர்களின் தாளமுடியாத தரித்திரத்திற்கும் பொருத்தத்தையே காண முடியவில்லை. முதலாளிகளின் இனத்தைச் சேர்ந்தவர்கள் காலத்தின் போக்கை உணருவார்களானால் நம்பவே முடியாத அளவு குறைந்த காலத்திற்குள் கடவுள் தமக்கு தம் செல்வத்தின் மீது உரிமை அளித்திருப்பதாகக் கொண்டிருக்கும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு விடுவார்கள். அவ்வாறு மாறுகையில், கிராமங்கள் என்ற பெயரில் இப்போது இருந்துவரும் 7 லட்சம் குப்பை மேடுகளும் அமைதியும் ஆரோக்கியமும் வசதிகளும் நிறைந்த குடியிருப்புகளாக மாறிவிடும். முதலாளிகள் ஜப்பானிய **சமுராய்**களின் வழியைப் பின் பற்றுவதனால் அவர்களுக்கு எவ்விதத்திலும் நஷ்டம் இல்லை; எல்லா வகையிலும் லாபமே. முதலாளிகள் தம்மிடம் உபரியாக உள்ளவற்றையெல்லாம் தாமே முன் வந்து துறப்பதன் மூலம் உண்மையான இன்பம் பெறப்போகிறார்கள். இல்லையேல், அவர்கள் விரைவில் விழித்துக்

கொள்ளாவிட்டால், விழிப்புற்றும் அறிவில்லாமலும் பட்டினி கிடந்து வாடிக் கொண்டுமிருக்கும் நாட்டின் கோடிக்கணக்கான மக்கள் நாட்டை சர்வ நாசத்தில் ஆழ்த்தும் போது அதை ஆற்றல் வாய்ந்த அரசாங்கத்தினிடம் உள்ள பெரும் படையினாலும் தடுக்க முடியப்போவதில்லை. இந்தப் பேராபத்து நிகழாமல் இந்தியாவினால் தன்னைப்பாதுகாத்துக்கொள்ள முடியுமென்று நான் நம்பி வந்திருக்கிறேன். - யங் இந்தியா, 5.12.1926, பக்கம் 296

அஹிம்சை முறையில் நாம் சுதந்திரம் பெறுவதற்கு உள்ள ஒரே வழி பொருளாதார சமத்துவம் எய்துவதுதான். பொருளாதார சமத்துவத்திற்காகப் பாடுபடுவதென்றால் முதலாளிகளுக்கும் தொழிலாளருக்குமிடையே ஓயாது நடந்து வரும் போராட்டத்தை ஒழிப்பது என்றுதான் அர்த்தம். அதற்கு ஒரு புறம் பணக்காரர் சிலரின் கையில் போய் குவிந்துள்ள பெருஞ் செல்வத்தைக் குறைத்தும், மறுபுறத்தில் பாதிவயிற்றுச் சோற்றுக்கும் வகையில்லாமலும், உடலில் ஆடையில் லாமலும் வாடும் ஏழைகளைக் கைதூக்கி விட்டும் ஆக வேண்டும். பணம் படைத் தவர்களுக்கும் பட்டினி கிடந்து சாகும் கோடிக்கணக்கான ஏழைகளுக்குமிடையே உள்ள இடைவெளி இவ்வளவு விரிந்து கிடக்கும் வரையில் அஹிம்சை முறையில் அரசாங்கம் நடத்துவது சிறிதும் சாத்தியமல்ல. நாட்டிலுள்ள பெரும் பணக்காரர்களுக்குள்ள அதே அதிகாரங்களும் உரிமைகளும் ஏழைகளுக்கும் இருக்கக்கூடிய சுதந்திர இந்தியாவில் புது டில்லியில் ஒரு புறம் பெரிய மாளிகைகளும், அதையடுத்து கூலிவேலை செய்து பிழைக்கும் ஏழைகளின் மிகவும் மோசமான குடிசைகளும் ஒன்றின் பக்கத்தில் ஒன்று நின்று, தம்மிடையேயுள்ள வேற்றுமையை உலகிற்கு அறிவித்தல் ஒரு நாளைக்குக் கூட நீடிக்காது. பணக்காரர்கள் தாமே வலிய வந்து தம் செல்வத்தையும் அதனால் தாம் பெற்றுள்ள சக்தியையும் துறந்து, பொது நலனுக்காக அதைப் பயன்படுத்தத் தவறினால், ஒரு நாளில்லாவிட்டால் ஒரு நாள் இங்கே பெரிய ரத்தக்கிளறியோடு புரட்சி நடப்பது உறுதி. தர்மகர்த்தா தத்துவத்தை எல்லோரும் கேலிசெய்து கொண்டிருந்தும் எனக்கு அதிலுள்ள நம்பிக்கை சிறிதும் தளரவில்லை. அதை அமுலுக்கு கொண்டு வருவது சிரமம் என்பது உண்மைதான். அஹிம்சையைக் கடைப்பிடிப்பது மட்டும் சுலபமா? ஆனால் நாம் அந்த மலையையும் ஏறிக்கடப்பது என்று 1920-ல் முடிவு, செய்து கொண்டோம். அதைச் செய்து, அதனால் விளைந்த பயன்களைப் பார்த்தபோது ‘பட்ட பாடு வீண் போகவில்லை’ என்று தெரியவந்தது.

- “நிர்மாணத்திட்டம்” (ஆங்கிலம்), பக் 20-21, பதி. 1948

இப்போது இருந்து வரும் ஏற்றத் தாழ்வுகள் மக்களின் அறியாமையின் விளைவே. தமது இயல்பான வலிமையை அவர்கள் உணர்ந்ததும் இந்த ஏற்றத்

தாழ்வுகள் தாமே விலகி விடவேண்டும். இதற்காக பலாத்காரப் புரட்சி நடத்தப்படு மானால் இப்போதுள்ள நிலைமை தலைகீழாக மாறுமாயினும் அந்த மாற்றத்தினால் எத்தகைய நலனும் விளையாது. அஹிம்சையை உபயோகித்தாலோ, அதாவது எதிரியை நல்ல முறையில் விஷயத்தைச் சொல்லி நம் வழிக்குத் திருப்பினாலோ மக்களெல்லோரும் எதிர்பார்க்கும் புதிய யுகம் பிறக்கும். நான் செல்லும் பாதையும், என் போக்கும், நான் எல்லோரிடமும் வேண்டிக் கொள்வதும் சிறிதும் கலப்பில்லாத அஹிம்சை வழியாகும். பிரெஞ்சு மக்கள் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற பெரிய, உயர்ந்த லட்சியம் கொண்டிருக்கிறார்கள். அது பிரெஞ்சுக்காரர்களுக்கு மட்டுமன்றி உலக மக்கள் அனைவருக்குமே உரிய சொத்தாகும்.

பிரெஞ்சுக்காரர்கள் என்றுமே சாதிக்க முடியாது போனதை நாம் சாதித்துக் காட்டலாம். சுதேச மன்னர்களும் அவர்களுக்குச் சமமாகச் செல்வம் படைத்த ஜமீன்தார்களும், வணிகர்களும் முன் நின்று இதை செய்து காட்டுவார்களா? இதை அவர்கள் செய்ய வேண்டுமே தவிர, கையில் ஒன்றுமே இல்லாமல், ஏழைமையையும் மனச் சோர்வையும் தவிர பிறரோடு பகிர்ந்து கொள்ள எதுவுமே இல்லாத ஏழை மக்களால் இதைச் செய்ய முடியாது.

- ஹரிஜன், 2.8.1942, பக்கம் 249

சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும் நம்மால் பொருளாதார சமத்துவம் உண்டாக்குவதற்கு இன்றே எதையும் செய்ய முடியாது, அதன் பொருட்டு பிரசாரம் மட்டுமே செய்து கொண்டிருப்போம் என்கிறார்கள். அதைச் செய்தால் இந்த நோக்கம் நிறைவேறுவதற்கு அனுகூலமாக துவேஷத்தை உண்டாக்கவும், ஏற்கனவே உள்ள துவேஷத்தைப் பெருக்கவும் முடியுமென்று அவர்கள் நம்புகிறார்கள். அரசாங்கத்தில் தாம் ஆதிக்கம் பெறும் போது சமத்துவத்தை உண்டாக்கி விடுவோம் என்கிறார்கள் அவர்கள். எனது திட்டத்திலோ அரசாங்கம் மக்களின் கருத்தை நடத்தி வைக்க அன்றி தன்னிஷ்டத்தைச் செய்யுமாறு அவர்களை ஏவவோ, நிர்ப்பந்தப்படுத்தவோ செய்யாது. துவேஷத்திற்கு மாறாக அன்பின் சக்திகளை ஒன்று திரட்டுவதன் மூலம் மக்களை என் கருத்தை ஏற்கும்படி செய்து, அஹிம்சையின் மூலம் நான் பொருளாதார சமத்துவத்தை உண்டாக்குவேன். நான் சமூகம் முழுவதையும் என் வழிக்குத் திருப்பும் வரையில் காத்திராது என்னிடமிருந்து இன்றே இதை ஆரம்பித்து விடுவேன். நான் சொந்தத்தில் 50 மோட்டார் கார்கள் வைத்திருந்தாலும், என்னிடம் 10 வேலி நிலம் இருந்தாலும் நான் நினைக்கும் பொருளாதார சமத்துவத்தைக் கொணரும் எண்ணம் வைத்திருப்பதற்கு அர்த்தமில்லை என்று நான் சொல்லாமலே புரியும். அதற்கு நான் என்னை நாட்டின் பரம ஏழைகளில் ஒருவனாக ஆக்கிக் கொள்ள வேண்டும்.

கடந்த 50 ஆண்டுகளாக நான் செய்ய முயன்று கொண்டிருப்பது இதுவேயாகையால் தனவந்தர்கள் அளித்துதவும் கார்களையும் பிற வசதிகளையும் நான் உபயோகித்துக் கொண்டாலும் என்னை முதன்மையான கம்யூனிஸ்டு என்று சொல்லிக் கொள்கிறேன். அந்த தனவந்தர்களால் என்னை ஆட்டிவைக்க முடியாது. அவர்களோடு எனக்குள்ள தொடர்பினால் ஏழை மக்களின் நலன் பாதிக்கப்படுவது தெரிந்தால், அந்தக் கணத்திலேயே என்னால் அவர்கள் உறவை உதறித் தள்ளிவிட முடியும். - ஹரிஜன், 31.3.1946, பக்கம் 64

ஒருவரது பரம்பரை எவ்வளவு உயர்ந்ததாயும் புராதனமானதாயும் இருந்தாலும், மக்களின் சுதந்திரம் ஒரு தனி மனிதன் இஷ்டத்தைப் பொறுத்ததாய் இருக்கக்கூடாது. எந்த மனிதனும் அவன் ஒரு சுதேச மன்னனோ அல்லது மன்னனைப் போன்ற பெருஞ் செல்வம் படைத்த ஜமீன்தாரோ அல்லது வணிகனோ. பரம்பரையாய் பெற்றிருப்பதோ அல்லது தானே சம்பாத்திததோ ஆன சொத்து முழுவதையும் தன் உடமையாகக் கருதுவதும், தன் இஷ்டம் போல் அதைச் செலவழிப்பதும் கூடாது. ஒவ்வொரு மனிதனுக்கும் தன் அண்டை அயலில் உள் ளோரைப் போலவே தன் திறமை முழுவதையும் உபயோகிக்க முழு சுதந்திரம் இருக்க வேண்டும். ஆனால் எவனுக்கும் அந்தத் திறமையினால் பெறப்படும் பயன்களை அல்லது லாபங்களை தன் இஷ்டம்போல் செலவழிக்க உரிமை கிடையாது. அவன் நாட்டின் ஒரு பகுதியே ஆவான்; அல்லது அவனைச் சூழ உள்ள சமுதாய அமைப்பின் ஒரு பகுதி என்று சொல்லலாம். ஆகையால் தனது திறமையை தன் சொந்த நலனுக்காகவன்றி தானும் சேர்ந்து உருவாகியுள்ளதும், எதன் தயவினால் தான் இருக்கிறானோ அந்த சமுதாய அமைப்பின் நலனுக்காகவே உபயோகிக்க வேண்டும். என் சொல் பெரிய தூண்களின் இடையே எடுபடாதோ என்ற சந்தேகம் இருந்ததனால் அந்தத் தூண்கள் (சுதேச மன்னர்கள், அவர்களுக்குச் சமமான நில முதலாளிகள், வியாபாரிகள்) எந்தப் பொது மக்களின் பலத்தில் நின்று கொண்டிருக்கின்றனவோ அவர்களை என் வழிக்குத் திருப்பலாம் என்று நினைத்தேன். இதனால் விளையக்கூடிய நிச்சயமான பேராபத்தைத் தவிர்ப்பதற்கு என்னால் ஆனது அனைத்தையும் செய்யத்தவற மாட்டேன். நான் இந்த விண்ணப்பம் செய்து கொண்டிருப்பதே அதனால்தான்.

- ஹரிஜன், 2.8.1942, பக்கம் 249

## 22. கிராம ஜனநாயகம்

இந்தியா அஹிம்சை வழியில் முன்னேற வேண்டுமானால் அது எத்தனையோ விஷயங்களைப் பரவல் முறையில் செய்தாக வேண்டும். குவியல்

முறைதான் வேண்டுமானால் அதை போது மான ராணுவமும் போலீசும் இன்றி நிலைநாட்டவோ பாதுகாக்கவோ முடியாது. அதிக சாமான்கள், தளவாடங்கள், துணி மணிகள் இல்லாத எளிய வீடுகளுக்கு பாதுகாப்பு எதுவும் தேவையில்லை. பணக்காரர்களின் மாளிகைகளையோ அவைகளிலுள்ள பொருள்கள், பணம், நகைகள் முதலியவைகளை கொள்ளை போகாமல் பாதுகாக்க கட்டுக்காவல் அவசியம் இருந்தாக வேண்டும். இதே போன்றது தான் பெரிய ஆலைகளின் விஷயமும். கிராமங்களின் அடிப்படையில் அமைந்த இந்தியாவுக்கு தரைப்படை, விமானப்படை, கப்பற்படை ஆகியவை மிகுதியாக வைத்துள்ளதும், நகரங்களின் அடிப்படையில் அமைந்ததுமான இந்தியாவைவிட வெளிநாட்டு படையெடுப்பின் ஆபத்து குறைவு.

- ஹரிஜன், 30.12.1939, பக்கம் 391

நான் கிராம சுயராஜ்யம் என்று நினைப்பது ஒரு முழுமையான சுதந்திரம் ஆகும். அது தனது ஜீவாதாரத் தேவைகளுக்குப் பிறர் கை பாராமலும், தவிர்க்க முடியாத பொருள்களைத் தம் அண்டை அயலில் உள்ள நாடுகளிடமிருந்து பெற்றும் தான் அவைகளுக்குக் கொடுத்தும் வரும். இவ்வாறு செய்கையில் ஒவ்வொரு கிராமமும் தன் தேவைக்கு வேண்டிய உணவு தானியங்களையும், தன் ஆடைக்கு தேவையான பருத்தியையும் தானே விளைவித்துக்கொள்ளும். அதனிடம் கால் நடைகளுக்கும், பெரியவர்களும் குழந்தைகளும் விளையாடவும், பொழுது போக்கவும் என ஒதுக்கப்பட்ட நிலம் இருக்க வேண்டும். இவைகளுக்குப் போக இன்னும் நிலமிருந்தால் அதில் கஞ்சா, புகையிலை, அபின் போன்றவற்றைத் தவிர்த்து வேறு உபயோகமான பணப் பயிர்களை பயிர் செய்யும்.

கிராமத்தில் ஒரு கிராமிய நாடக அரங்கமும் பள்ளிக்கூடமும், பொது நிகழ்ச்சிகள் நடத்த மண்டபமும் இருக்கும். தனக்கு வேண்டிய சுத்தமான தண்ணீர் அளிப்பதற்கு கிராமத்திலேயே குளங்களும் கிணறுகளும் இருக்கும்; இவைகளை காவல் போட்டு எப்பொழுதும் சுத்தமாய் இருக்குமாறு பார்த்துக் கொள்ளும். இறுதி வகுப்பு வரையில் ஆதாரக்கல்வி முறையில் கட்டாயமாக எல்லாக் குழந்தைகளுக்கும் கல்வி அளிக்கப்படும். செய்யும் எல்லாக் காரியங்களும், முயற்சிகளும் கூடிய வரையில் கூட்டுறவு முறையிலேயே செய்யப்படும். இன்று இருப்பது போல் படிப்படியாய் தீண்டாமையோடு சேர்ந்த சாதிப் பிரிவினைகள் இரா.

கிராம சமுதாயத்தின் கையிலுள்ள பலம் சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை ஆகியவைகளின் மூலம் செயல்படும் அஹிம்சை தான். கிராமத்தைப் பாதுகாக்கும் பொறுப்புள்ள படையொன்று கட்டாயம் இருக்கும். அதற்கு கிராமத்தினிடம் உள்ள பட்டியலிலிருந்து வரிசைக் கிரமமாக ஆட்கள்

பொறுக்கி எடுக்கப்படுவார்கள். கிராமத்திலுள்ள வயது வந்த, விதிக்கப்படும் குறைந்த பட்சத் தகுதியுள்ள ஆடவர் பெண்கள் இடையிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் 5 பேரைக் கொண்ட பஞ்சாயத்தினால் கிராமத்தின் நிர்வாகம் நடத்தப்படும். இந்தப் பஞ்சாயத்திற்கு தேவையான எல்லா அதிகாரங்களும் இருக்கும். சாதாரணமாய் பொதுவில் கருதப்படும் வகையில் தண்டனைகள் அளிக்கும் முறை இராதாகையால் இந்தப் பஞ்சாயத்தே கிராமத்தின் சட்ட சபையாகவும், நீதிமன்றமாகவும், ஆட்சிக்குழுவாகவும் இருந்து அது அமர்த்தப்பட்டுள்ள காலத்திற்கு இயங்கும்.

இப்பொழுதைய அரசாங்கத்திற்கு கிராமங்களுடன் உள்ள தொடர்பு அவைகளிடமிருந்து வரி வசூலிப்பதேயாகையால் இதன் தலையீடு இல்லாமலே எந்த கிராமமும் இன்றே இத்தகைய சுதந்திர கிராமமாக ஆகலாம். நான் இங்கே அண்டை அயல் கிராமங்களுடனும், மத்திய அரசாங்கம் ஒன்று இருந்தால் அதனுடனும், இதற்கு இருக்க வேண்டிய உறவை ஆராயவில்லை. எனது நோக்கம் கிராம ஆட்சிக்கு ஒரு மேலெழுந்த வாரியான குறிப்பு அளிப்பது தான். இங்கே தனி மனிதன் சுதந்திரத்தின் அடிப்படையில் பூரண ஜனநாயகம் அமைந்திருக்கிறது. ஒவ்வொரு தனி மனிதனும் தனது அரசாங்கத்தை உருவாக்க உதவுகிறான். அவனும் அவன் அரசாங்கமும் அஹிம்சைக் கொள்கைக்குக் கட்டுப்பட்டு நடக்கின்றனர். அவனும் அவன் கிராமமும் உலகையே வேண்டுமானாலும் எதிர்த்து நிற்கக் கூடியவர்களாய் இருக்கிறார்கள். இதற்குக் காரணம் கிராமத்திலுள்ள ஒவ்வொருவனும் தன் மதிப்பையும், தன் கிராமத்தின் கௌரவத்தையும் காக்க வேண்டி தன் உயிரை வேண்டுமானாலும் அளிக்கச் சித்தமாய் இருப்பது தான்.

இத்தகைய கிராமம் ஒன்றை அமைப்பதற்கு ஒருவர் தம் ஆயுள் முழுதும் பாடுபடவேண்டி இருக்கலாம். உண்மையான ஜனநாயகத்தில் ஈடுபாடுள்ள எவரும், கிராம வாழ்க்கையில் பற்றுள்ள எவரும் ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதிலேயே ஆழ்ந்துபோய் பாடுபட்டால் தக்க பயன் விளையும். அதற்கு அவர் முதலில் தானே கிராமத்தின் தோட்டியாகவும், நூற்போராகவும், காவல்காரராகவும், வைத்தியராகவும், பள்ளி ஆசிரியராகவும் ஏக காலத்தில் இருந்து பணியைத் தொடங்க வேண்டும். அவர் இருக்கும் இடத்திற்கே எவரும் வராமல் ஓடிக்கொண்டிருந்தால், அவர் கிராமத் தெருக்களைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தம் செய்வதோடு, எஞ்சிய நேரத்தில் நூல் நூற்பதோடு திருப்தியாயிருக்கட்டும்.

- ஹரிஜன் 26.7.1942 பக்கம் 238

சுதந்திரம் என்பது அடியிலிருந்து ஆரம்பம் ஆக வேண்டும். அப்படியானால் ஒவ்வொரு கிராமமும் எல்லா அதிகாரங்களும் கொண்ட

பஞ்சாயத்தாக அல்லது சுதந்திர கிராமமாக இருக்கும்; அப்படியானால ஒவ்வொரு கிராமமும் தன்னைத்தானே கவனித்துக் கொள்ளக் கூடியதாய், தன் நிர்வாகம் முழுவதையும் தானே நடத்தக் கூடியதாய், உலகமே எதிர்த்து வந்தாலும் தன்னைத்தானே காத்துக்கொள்ள கூடியதாய் இருக்க வேண்டும் என்று ஆகிறது. வெளியேயிருந்து வரும் தாக்குதலை எதிர்த்து நின்று சமாளிக்கத்தக்க வகையில் அது பயிற்றப்படவும், அந்த முயற்சியில் தேவையானால், அழிந்து போகவும் சித்தமாயிருக்க வேண்டும். எனவே பார்க்கப் போனால், கிராமத்தில் உள்ள ஒவ்வொரு மனிதனும் தான் இவற்றை எல்லாம் செய்ய வேண்டியவன். இதற்கு அவன் தான் அண்டை அயலாரோ உலகமோ விரும்பி அளிக்கும் உதவியை ஏற்கக் கூடாது. அவர்களைச் சார்ந்து இருத்தலே கூடாது என்று அர்த்தமில்லை. பிறர் இவ்வாறு அளிக்கும் உதவியெல்லாம் தாமே விரும்பி அளிப்பதாகவும், நிர்பந்தம் இல்லாமல் பரஸ்பரம் அளிப்பதாகவுமே இருக்கும். இத்தகைய சமுதாயம் மிகவும் உயர்ந்த பண்புள்ளதாய் இருந்தே தீர வேண்டுமாகையால் அதைச் சேர்ந்த ஒவ்வொரு ஆடவனுக்கும் பெண்ணுக்கும் தன் தேவை என்னவென்று தெரிந்திருக்கும். இதைவிட முக்கியமானது, அவர்கள் எல்லோரும் ஒரே வகை உழைப்பினால் மற்றவர்களால் பெற முடியாதது எதுவும் தமக்கும் வேண்டாமென்று இருப்பதாகும்.

இவ்வாறு எண்ணிலடங்காத கிராமங்களினால் உருவான அமைப்பு நாளுக்கு நாள் கீழே விரிந்து பரந்து கொண்டிருக்குமே தவிர. மேலே உயர்ந்து கொண்டே போகாது. வாழ்க்கை அதன் கீழ்த்தளம் அதற்கு மேலுள்ளதையும், அது அதற்கு மேலுள்ளதையும் தாங்குவதாயும், எல்லாவற்றுக்கும் மேலே ஸ்தூபியும் கொண்டே கோபுரமாயிராது. அது கடலின் அலை வட்டங்களைப்போல் அமைந்திருக்கும். அதன் வட்டத்தில் தனி மனிதர் இருப்பர். அவர் எப்பொழுதும் தன் கிராமத்திற்காகவும், அந்தக்கிராமம் தன்வட்டத்தில் அமைந்த பிற கிராமங்களுக்காகவும் அழியச் சித்தமாயிருப்பார்களாகையால் மொத்தத்தில் எலலாருமாகச் சேர்ந்து ஒரே உயிரும் ஒரே உடலும் போல் இருப்பார்கள். ஆனால் அது முழுதும் தனி மனிதர்களாலான அமைப்பாகவே இருக்கும். அந்த அமைப்பு என்றுமே கர்வமுற்று பிறரை அடக்கவோ ஆக்கிரமிக்கவோ விரும்பாமல், மிகுந்த பணிவு பொருந்தியதாகவும், அதே சமயத்தில் எந்தக் கடலின் பெரு வட்டத்தின் உருப்புக்களாக அவர்கள் ஒவ்வொருவரும் இருக்கிறார்களோ அதன் பெருமையோடும் திகழும்.

இதில் மனிதர்களின் உடல் உழைப்பை உபயோகமில்லாததாக ஆக்குவதும், ஒரு சிலரின் கையில் சக்தி முழுவதையும் கொண்டு சேர்ப்பதுமான யந்திரங்களுக்கு இடமில்லை. பண்புள்ள எந்த மானிடக் குடும்பத்திலும்

உடலுழைப்பிற்கு அதற்கே உரிய சிறப்பான இடம் உண்டு. தனி மனிதனுக்கு உதுவும் ஒவ்வொரு யந்திரமும் அதில் வரவேற்கப்படும். - ஹஜன் 28.7.1946 பக்கம் 236

நான் கருதும் கிராமம் என்ற அலகு மிகுந்த பலம் பெற்றதாயிருக்கும். நான் கற்பனை செய்யும் கிராமம் ஒவ்வொன்றிலும் ஆயிரம் பேர் வாழ்வார்கள். இத்தகைய அழகு, அது சுயதேவைப்பூர்த்தியின் அடிப்படையில் அமைந்து நடக்குமானால், தன் வேலையை சிறப்பாகச் செய்து நல்ல பெயர் எடுக்க முடியும்.

- ஹரிஜன் 4.3.1946 பக்கம் 252

அஹிம்சையின் அடிப்படையில் உருவாகியுள்ள சமுதாயமென்றால் அது மதிப்போடு பொருந்தியதும், அமைதியானதுமான வாழ்க்கையை வேண்டி, ஒருவர் மற்றவருக்கு உதவுவோரைக் கொண்ட கிராமங்களில் குழாம்களாய் வாழ்வதாய்த் தானிருக்க முடியும்.

- ஹரிஜன் 13.1.1940 பக்கம் 10-11

பஞ்சாயத்தாட்சி இயங்கத் தொடங்கியதும் போலீசினாலும் ராணுவத்தினாலும் செய்ய முடியாதவைகளை பொதுஜன அபிப்பிராயம் சாதித்துவிடும். பொது மக்கள் தம் சக்தியை உணர்ந்தாகும் வரையில் தான் இப்பொழுதைய ஜமீன்தார்கள், முதலாளிகள், ராஜாக்கள் ஆகியோரின் ஆதிக்கம் நிலைத்திருக்கும். மக்கள் ஜமீன்தாரி அல்லது முதலாளித்துவம் என்ற தீமையுடன் ஒத்துழைக்க மறுத்தவுடனே இவை தெம்பற்று, தாமே செத்து மடிந்து போம். பஞ் சாயத்தாட்சியில் பஞ்சாயத்துக்குத்தான் எல்லோரும் அடங்கி நடப்பார்கள். பஞ்சாயத்தும் தன்னை நியமித்த மக்கள் இயற்றித் தந்துள்ள சட்ட திட்டங்களின் படியே இயங்கும். - ஹரிஜன் 1.6.1947 பக்கம் 172

## 23. மேனாடுகளின் ஜனநாயகம்

மேலைநாட்டு ஜனநாயகம் என்பது பெயரளவுக்கு நடக்கும் ஜனநாயகமே என்பது அபிப்பிராயம். அதில் உண்மையான ஜனநாயகத்தின் அம்சங்கள் சில இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் அது முற்றிலும் ஜனநாயகமாவதற்கு அதிலிருந்து பலாத்காரமும் லஞ்சம் முதலியனவும் அறவே ஒழிய வேண்டும். இவை இரண்டும் சேர்ந்தேதானிருக்கும். லஞ்சம் முதலியவை பலாத்காரத்தின் இனத்தைச் சேர்ந்தவையே. இந்தியா உண்மையான ஜனநாயகத்தை உருவாக்க வேண்டுமென்றால் அது பலாத்காரத்திற்கும் பொய் பித்தலாட்டத்திற்கும் சிறிதும் இடம் கொடுக்கக்கூடாது. - ஹரிஜன் 3.9.1938 பக்கம் 242

ஒன்று மட்டும் நிச்சயம். ஆயுதங்களைத் தயாரித்துக் குவிக்கும் இந்தப் போட்டி மட்டும் தொடர்ந்து நடக்குமானால் அது இதுவரையில் வரலாறு கண்டிராத

பெரிய ரத்தக் களறியில் தான் போய் முடியப் போகிறது. அதன் இறுதியில் வெற்றி பெற்ற நாடு ஒன்று இருக்குமானால் அந்த வெற்றியே அந்த நாட்டிற்கு சாவைவிட மோசமானதாய், உயிரோடு சாகும் நிலையாய்த்தானிருக்கும். நெருங்கிக் கொண்டிருக்கும் இந்தப் பேராபத்திலிருந்து தப்புவதற்கு, அதன் பெருமை வாய்ந்த விளைவுகளோடு பொருந்திய அஹிம்சை முறையை நிபந்தனை எதுவுமின்றி தைரியமாய் ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. ஜனநாயகமும் பலாத்காரமும் ஒன்றோடொன்று பொருந்தமாட்டா. இன்று பெயரளவுக்குத் தம்மை ஜனநாயகமென்று சொல்லிக்கொள்ளும் நாடுகள் எல்லாம் வெளிப்படையாகவே சர்வாதிகாரங்கள் ஆகிவிட வேண்டும். அல்லது உண்மையான ஜனநாயகங்களாவ தென்றால் தைரியமாக அஹிம்சையை ஏற்க முன்வர வேண்டும். அஹிம்சையை தனி மனிதர்களால் தான் கடைப்பிடிக்க முடியும், தனி மனிதர்களைக் கொண்டு அமைந்த நாடுகளினால் முடியாது என்று சொல்வது முற்றிலும் பொய்.

- ஹரிஜன் 12.11. 1938 பக்கம் 328

ஐரோப்பாவில் மக்கள் அரசியல் சுயஆட்சி பெற்றிருந்த போதிலும் அடிப்படையில் இந்தியாவையும் ஐரோப்பாவையும் வதைக்கும் நோய் ஒன்றே யென்று நான் உணருகிறேன். இந்திய தேசீய வாழ்க்கைக்கு அரசியல் அதிகாரங்கள் அவசியம் என்று நான் நினைப்பினும் அரசியல் அதிகாரங்கள் கைமாறுவதனாலேயே என் ஆசை நிறைவேறாது. ஐரோப்பிய நாடுகளில் மக்கள் அரசியல் அதிகாரம் பெற்றிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அவர்கள் சுயராஜ்யம் அனுபவிக்கவில்லை. ஆசீய-ஆப்பிரிக்கா சாதிகள் அவர்களின் ஓரளவு நலனுக்காக சுரண்டப்படுகிறார்கள். ஆனால் அவர்களே தம் நாடுகளின் ஆளும் கட்சிகள் அல்லது சாதிகளினால் ஜனநாயகத்தின் புனிதமான பெயரால் சுரண்டப்பட்டு வருகிறார்கள். ஆகவே அடிப்படையில் பார்க்கும் போது அங்கும் இந்தியாவிலுள்ள நோயே இருப்பது தெரிகிறது. ஆகையால் இங்கு நாம் அளிக்க விரும்பும் அதே மருந்து பயன் அளிக்கலாம். மேல் பூச்சுகளை அகற்றி விட்டுச் சொன்னால், ஐரோப்பாவிலும் பொது மக்கள் பலாத்காரத்தின் மூலமே சுரண்டப்பட்டு வருகிறார்கள் என்று சொல்ல வேண்டியிருக்கும்.

பொது மக்கள் பலாத்காரத்தில் இறங்குவது நோய்க்குத் தக்க மருந்தாகாது. அது எவ்வாறிருப்பினும், அனுபவத்தில் பலாத்காரம் பெற்ற வெற்றி அற்ப ஆயுள் உள்ளதாய்ப் போய், மேலும் கடுமையான பலாத்காரத்திலேயே கொண்டுபோய் விட்டிருக்கிறது. இது வரையில் செய்து பார்க்கப்பட்டதெல்லாம் பலாத்காரத்தில் ஒரு வகையும், முக்கியமாய், பலாத்காரம் புரிந்தவர்களின் இஷ்டப்படி எடுக்கப்பட்ட செயற்கை நடவடிக்கைகளும் தான். இக்கட்டான சமயத்தில் இந்தத் தடுப்பு யுக்திகளெல்லாம் தகர்ந்து பயன்படாது

போயிருக்கின்றன. ஆகையால் விரைவிலோ, காலம் தாழ்த்தியோ ஐரோப்பிய மக்கள் விடுதலையைக் காண வேண்டுமானால் அவர்கள் அஹிம்சையை ஏற்றாக வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இதை எங்கே செய்யப்போகிறார்கள், அதுவும் உடனே செய்யப் போகிறார்களா என்ற ஐயங்கள் எனக்குக் குழப்பம் விளைவிக்கவில்லை. எண்ணிலடங்காத ஆண்டுகளைக் கொண்ட உலகின் ஆயுளில் ஒரு சில ஆயிரம் ஆண்டுகள் என்பது ஒரு சிறு துளியேயாகும். யாரோ ஒருவர் எதற்கும் கலங்காத நம்பிக்கையுடன் காரியத்தை ஆரம்பிக்கத்தான் வேண்டும். பொதுமக்கள் ஐரோப்பிய மக்களும் கூட நாம் சொல்கிறபடி நடந்து கொள்வார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் காலத்தைக் கருதுகையில் எனக்கு முக்கியமாய்த் தோன்றுவது அஹிம்சையைப் பேரளவில் பரிசோதித்துப் பார்ப்பதைவிட விடுதலை என்பதன் சரியான பொருளைப் புரிந்து கொள்வதேயாகும். பொது மக்களை எதிலிருந்து விடுவிக்க வேண்டும் என்கிறோம். பொதுப் படையாகவும், தெளிவில்லாமலும், சுரண்டலிலிருந்தும் இழிந்த வாழ்க்கையிலிருந்தும் என்று சொன்னால் போதாது. அவர்களும் இப்போது முதலாளித்துவம் பெற்றுள்ள இடத்தையே தாங்களும் பெற விரும்புகிறார்கள் என்பதே இதற்கு விடையல்லவா? இதுவே விடையானால் அதை பலாத்காரத்தின் மூலம் தான் பெற இயலும். அவர்கள் முதலாளித்துவத்தின் தீமைகளை வெறுப்பதானால் அதாவது முதலாளித்துவத்தின் நோக்கத்தையே மாற்றப் போவதானால் தம் உழைப்பினால் உண்டாக்கப்படும் பொருள்களை இன்னும் நியாயமான முறையில் வினியோகிக்க முயலுவார்கள். இதைச் செய்வதென்றால் தாமே விரும்பி எளிமையை ஏற்கவும், உள்ளதைக் கொண்டு திருப்தியாய் இருக்கவும் வேண்டியிருக்கும். இந்தப் புதிய ஏற்பாட்டில் ஏராளமான தேவைகளை உண்டாக்கி, அவைகளைப் பூர்த்தி செய்வதே வாழ்க்கையின் நோக்கமாய் இருப்பது போய், தம் சௌக்கியத்திற்குப் போதுமானவைகளை மட்டும் பெறுவதே நோக்கமாயிருக்கும். நாம் நமக்குக் கிடைத்தவைகளையெல்லாம் பெற்றுச்சேர்த்துக்கொண்டு இராமல் எல்லோருக்கும் கிடைக்கக் கூடாதது நமக்கும் வேண்டாம் என்று இருந்து வருவோம். பொருளாதார ரீதியில், அதில் வழங்கும் சொற்களின் மூலம் ஐரோப்பிய மக்களுக்கு இதை எடுத்துச் சொன்னால் அவர்கள் ஏற்காதிரார் என்றும். ஓரளவு திருப்திகரமான முறையில் இந்தச் சோதனையை அங்கே நடத்தினால் அதன் வெற்றியிலிருந்து நாம் இப்போது எண்ணவும் முடியாத எவ்வளவோ ஆன்மீக நன்மைகள் விளையுமென்றும் எனக்குத் தோன்றுகிறது. ஆன்மீக நியமங்கள் மற்றவைகளுடன் சேராமல் தனியே இயங்குவதாக நான் நினைக்கவில்லை. மாறாக, அது வாழ்க்கையின் சாதாரண நடவடிக்கைகளின் மூலமே தன்னை வெளிப்படுத்துகிறது. இவ்வாறு தான் அது வாழ்க்கையின்

பொருளாதாரதுறையையும், சமூக, அரசியல் துறைகளையும் மாற்றுகிறது. நான் மேலே குறிப்பிட்டுள்ள கருத்தை ஐரோப்பிய மக்கள் ஏற்குமாறு செய்யப்பட்டு விடுகையில் அவர்களின் நோக்கம் நிறைவேற பலாத்காரம் தேவையேயில்லை என்பதும், அஹிம்சையின் எல்லாப்பிரிவுகளையும் பின்பற்றி நடப்பதனால் அவர்கள் சுலபமாய் தம் உரிமைகளைப் பெற்று விட முடியுமென்பதும் தெரியவரும். இந்தியாவுக்கு இயல்பானது, சுலபமானதென்று எனக்குத் தோன்றும். இது சோம்பலில் ஊறியுள்ள இந்தியா மக்களின் மனத்தில் புகுவதற்காகும் நேரத்தை விட, சுறுசுறுப்புள்ள ஐரோப்பியர்களின் மனத்தில் எளிதாகவும் விரைவிலும் புகவும் செய்யலாம். ஆனால் எனது வாதங்களும், ஒப்புதல்களும்-எல்லாமே நானாக எண்ணிக்கொண்ட, கற்பனை செய்துள்ளவற்றை ஆதாரமாகக் கொண்டிருப்பதால் அவைகளுக்குரிய மதிப்பை அளித்தால் போதும் என்று மீண்டும் ஒருமுறை சொல்லி விடுகிறேன். - ஹரிஜன் 3.9.1925 பக்கம் 304

போர் விஞ்ஞானம் நம்மை கலப்படமில்லாத சர்வாதிகாரத்திற்கு இட்டேகுகிறது. அஹிம்சை விஞ்ஞானம் ஒன்றினால்தான் தூய ஜனநாயகத்திற்கு வழிகாட்ட முடியும். இங்கிலாந்தும் பிரான்சும் அமெரிக்காவும் இவற்றுள் ஒன்றைத்தேர்ந்து கொண்டாக வேண்டும். - ஹரிஜன் 15.10.1938 பக்கம் 290

ஒன்று உண்மையில் ஒருவருடைய உரிமை என்றால் அதை முரட்டுத் தனமான அல்லது பலாத்காரமான முறைகளினாலன்றி சரியான முறைகளினால் நிரூபித்து நிலைநாட்ட முடிய வேண்டும். மனிதன் தனது உரிமையென்று நினைப்பதை நிலைநாட்டுவதற்காக தன் ரத்தத்தைச் சிந்தலாம், சிந்தவே வேண்டும். தனது உரிமையை மறுக்கும் எதிரியின் ரத்தத்தைச் சிந்தவே கூடாது. அஹிம்சையினால் நம் உரிமையைப் பாதுகாக்கப் பெறப்படும் சக்தியோடு ஒப்பிடும் போது இதையே செய்வதற்கு ஆயுதங்கள் அளிக்கும் சக்தி ஒன்றுமேயில்லை. சாத்துவீக முறையில் அதைச் செய்கையில் அதை எல்லோரும் நியாயமான தென்றும் ஒப்புக்கொள்வார்கள். ஆயுதங்களினால் நியாய அநியாயத்தை நிரூபிப்பதாக பாவனை செய்ய முடியுமே தவிர உண்மையில் அவ்வாறு எதுவும் செய்ய இயலாது. - ஹரிஜன் 14.10.1939 பக்கம் 201-22

பாஸிஸ்ட் அல்லது நாஜி அரசுகளுக்கும் நேசநாடுகளுக்கும் வித்தியாசம் எதுவும் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. இவையெல்லாமே பிற நாடுகளைச் சுரண்டுபவைதாம். தம் நோக்கம் நிறைவேறுவதற்குத் தேவையான கடுமையான பலாத்கார நடவடிக்கைகளை இவையெல்லாமே எடுக்கின்றன. அமெரிக்காவும், பிரிட்டனும் மிகவும் பெரிய நாடுகள். ஆனால் ஆப்பிரிக்காவையோ ஆசியாவையோ சேர்ந்த வாயில்லாத மக்கள் என்ற தெய்வீக நீதிமன்றத்தின் முன் நிறுத்தப்படும் போது இவைகளின் பெருமை தெருப்புழுதியின் மதிப்புக்கூடப்

பெறாது. இவை தம் கைகளில் படிந்துள்ள ரத்தக்கறையைக கழுவிச்சுத்தம் செய்து கொள்ளுமுன் மனித சுதந்திரம் பற்றியும் பிறவற்றை பற்றியும் அளப்பதற்கு இவை களுக்கு உரிமை கிடையாது. அதன் பிறகு அல்லாமல் அதற்கு முன் புதிய ஏற்பாடு ஒன்றுக்காக தாம் போராடுவதாக அவை சொல்வதற்கு அர்த்தமேயில்லை.

- ஹரிஜன் 14.6.1942 பக்கம் 188

## 24. ஜனநாயக உலகக் கூட்டமைப்பு

உலக நாடுகளின் கூட்டமைப்பு என்ற லட்சியம் ஒவ்வொரு நாடும் தனித் தனியே சுதந்திரமாய் இருப்பதையன்றி, அவையெல்லாம் தன்னிச்சையாக ஒன்றையொன்று சார்ந்து இருப்பதையே குறிக்கும்.

- யங் இந்தியா 17.7.1924 பக்கம் 236

உலகிலுள்ள நல்லவர்கள் பெரியவர்கள் எல்லோரும் இன்று விரும்புவது ஒன்றோடொன்று பொருந்தி கொண்டிருக்கும் தனித்தனியான சுதந்திர நாடுகளையல்ல, நட்புறவோடு கூடியதும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதுமான கூட்டமைப்பையே ஆகும். இந்த விருப்பம் நிறைவேறுவதற்கு நீண்ட காலம் பிடிக்கலாம். நம் நாட்டைப் பற்றியவரையில் அது பெரிதாக எதையோ சாதிக்கப்போவதாக நான் சொல்ல விரும்பவில்லை. ஆனால் நம் நாடு மட்டும் சுதந்திரம் பெற்று தனித்து இருப்பதைவிட, எல்லா நாடுகளும் ஒன்றையொன்று சார்ந்து சுதந்திரமாயிருப்பதே நம் விருப்பம். அதற்கு நாம் சித்தமாயிருக்கிறோம் என்று கூறுகையில் நடக்கக் கூடாத பெரிய விஷயமொன்றைத் தனியே வற்புறுத்திக் கொண்டிராமல் முற்றிலும் சுதந்திரமாய் இருப்பதற்கு வேண்டிய சக்தியையே நான் விரும்புகிறேன்.

- யங் இந்தியா 26.12.1924 பக்கம் 425

சுயதேவைப் பூர்த்தியைப் போலவே ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்வதும் மனிதனுடைய லட்சியமே, லட்சியமாகத்தான் இருக்க வேண்டும். மனிதன் பலர் சேர்ந்து சமுதாயமாக வாழ்வதற்கென்றே இருப்பவன். சமுதாயத்துடன் கொடுத்தும் வாங்கியும் உறவு கொள்ளாதிருக்கையில் அவனால் உலகம் முழுவதுடனும் ஒன்ற முடியாது, தன் ஆணவத்தையும் அடக்க முடியாது. வாழ்க்கையில் தான் பிறருக்கு உதவியும், பிறர் உதவியைப் பெற்றும் வருகையில் அவனுக்குத் தன் நம்பிக்கையை பரிசோதித்துப் பார்க்கவும், உண்மை நிலையில் தன்னால் சமாளிக்க முடியும் என்பதை நிரூபிக்கவும் முடிகிறது. மனிதனால் தன் சகமனிதர்களின் உதவியில்லாது வாழ முடிந்தாலும் வாழுமாறு தன்னை அவன் வைத்துக்கொண்டு விட்டாலும், அவன் மிகுந்த தற்பெருமையும் தலைகனமும் உள்ளவனாக ஆகி, உலகிற்கு பாரமாகவும், அதன் அமைதியைக்

கெடுப்பவனாகவும் ஆகிவிடுவான். சமூகத்தின் உதவியினால், அதைச் சார்ந்து இருக்க வேண்டி வருகையில் அவன் பணிவுடன் இருக்கக் கற்றுக்கொள்கிறான் மனிதனென்றால் தனது முக்கியமான தேவைகள் அனைத்தையும் அவன் தன் சொந்த முயற்சியினாலேயே தேடிக்கொள்ள முடிய வேண்டும் என்பது தெரிந்த விஷயம். ஆனால் இந்த சுயதேவைப் பூர்த்தியை அளவுக்கதிகமாகச் செய்து ஒருவன் தன்னை சமூகத்திலிருந்தே தனியாகப் பிரித்துக் கொண்டு விடுகையில் அதுவே ஒரு பாவமாகி விடுகிறது என்பதில் எனக்கு சந்தேகமே இல்லை. பருத்தி பயிரிடுவது முதல் நூல் நூற்கும் வரையில் செய்ய வேண்டியுள்ள பல்வேறு கிரியைகளையும் கூட ஒரு மனிதன் தானே செய்தல் சாத்தியம் அல்ல. ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் அவன் தன் குடும்பத்திலுள்ள மற்றவர்களின் உதவியையும் பெறவே வேண்டியிருக்கிறது. குடும்பத்தாரின் உதவியைப் பெறலாமென்றால் அண்டை அயலில் இருப்பவர்களையும் ஏன் உதவிக்கு அழைக்கக் கூடாது? கூடா தென்றால் 'உலகம் முழுவதும் என் குடும்பம்தான்' ("வஸுதைவ குடும்பகம்") என்ற பொன்மொழி தோன்றியதுதான் எதற்காக?

- யங் இந்தியா 21.3.1929 பக்கம் 93

சுதந்திரமான ஜனநாயக இந்தியா பிற சுதந்திர நாடுகளுடன் அந்நியர் படையெடுப்பை எதிர்த்து எடுக்கப்படும் பரஸ்பரப் பாதுகாப்பு நடவடிக்கைகளிலும். பொருளாதார ஒத்துழைப்பிலும் மகிழ்ச்சியோடு கலந்து கொள்ளும். உலகம் பெற்றுள்ள அறிவையும், அதனிடம் உள்ள வசதிகளையும். மக்கள் சமுதாயத்தின் முன்னேற்றம், வளர்ச்சி ஆகியவற்றுக்காகப் பயன்படுத்தி, அமைக்கப்படவிருக்கும் உண்மையான உலக அரசாங்கம் அல்லது அமைப்பின் பொருட்டு அது பாடுபடும்.

- ஹரிஜன் 23.9.1939 பக்கம் 278

உண்மையான ஜனநாயகம் என்பது அஹிம்சையின் விளைவாகத்தான் உருவாக முடியும் என்று நான் நம்புகிறேன். உலக நாடுகளின் கூட்டமைப்பை அஹிம்சையின் அஸ்திவாரத்தின் மீது அன்றி எழுப்பமுடியாது. உலக விவகாரங்களில் ஹிம்சையை, பலாத்காரத்தை அறவே விட்டாக வேண்டும்.

"அரசாங்கத்திற்கும் காந்தியடிகளுக்கும் கடிதப் போக்குவரத்து 1942-44ல்" (ஆங்கி.) பக்.175, பதி. 1945

உலகநாடுகள், அரசாங்கங்கள் எல்லாம் போரின் ஆற்றலிலும் அதோடு இணைந்த பயங்கரமான மோசடி, பித்தலாட்டம் ஆகியவைகளிலும் தாம் கொண்டுள்ள நம்பிக்கையை விடும் வரையில் , எல்லா சாதிகள், இனங்கள். நாடுகள் ஆகியவைகளின் சமத்துவம், சுதந்திரம் ஆகியவற்றின் அடிப்படையில் உண்மையான சமாதானத்தை உருவாக்க அவை உறுதி பூணும் வரையில் உலகிலோ நேசநாடுகளுக்கோ சமாதானம் அல்லது அமைதி என்பதே கிடையாது என்ற என் முடிவான அபிப்பிராயத்தை மீண்டும் வற்புறுத்துகிறேன். இனி போரே

மூளாது செய்ய விரும்பும் உலகில், போர்கள் அனைத்தையுமே ஒருவாறு முடிவுறச் செய்யப் பாடுபடும் உலகில் ஒரு நாடு இன்னொரு நாட்டை ஆக்கிரமிப்பது, சுரண்டுவது என்பதற்கே இடமில்லை; அத்தகைய உலகில் தான் போதிய ராணுவ பலமில்லாமையினால் தெம்பற்றிருக்கும் நாடுகள் பிற நாடுகளைக் கண்டு அஞ்சவோ, சுரண்டலுக்கு உள்ளாகவோ நேராது.

17-4-1945-ல் சான்பிரான்ஸிஸ்கோவில் நேசநாடுகளின் ராஜ தந்திரிகள் நடத்திய மாநாட்டின் போது காந்தியடிகள் வெளியிட்ட அறிக்கையிலிருந்து

- "தி பாம்பே கிரானிகிள்" (ஆங்கிலம்) 18-4-1945

ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் ஐரோப்பாவில் பொதுவான ஆயுத பரிமானம் அமுலுக்கு வந்தே தீரப்போகிறது. இது நடக்காவிட்டால் ஐரோப்பா முழுதும் தற்கொலை செய்து கொள்ள வேண்டி வரும். இதற்கு முன் ஏதோ ஒரு நாடு முன் வந்து தன் ஆயுதங்களை எல்லாம் களையவும், அதன் விளைவுகளை ஏற்கச் சித்தமாயிருக்கவும் வேண்டியிருக்கும் என்பது தெளிவு. இந்த மகிழ்ச்சியளிக்கும் நிகழ்ச்சி நடக்குமானால் அந்த நாட்டில் அனுஷ்டானத்தில் இருக்கும் அஹிம்சை மிகவும் உயர்ந்த தரத்ததாய், அகில உலகின் மதிப்பையும் பெறுவதாய் இருக்கும். அந்நாடு செய்யும் முடிவுகளெல்லாம் சரியாயிருக்கும். அது அளிக்கும் தீர்ப்புகளில் தவறிராது. அது எடுக்கும் முடிவுகள் உறுதி வாய்ந்தவையாயிருக்கும். பெரும் தியாகம் செய்வதற்கு அதற்குள்ள சக்திக்கு அளவிராது. அது தன் நலனில் போலவே பிற நாடுகளின் நலனிலும் கருத்தாய், அவைகளுக்காகவே வாழ விரும்பும்.

- யங் இந்தியா, 8.10.1925, பக்கம் 345

உலகில் சாசுவதமாய் அமைதி நிலவும் என்பதை ஒருவர் நம்பவில்லையென்றால் மனித சுபாவத்திலுள்ள கடவுள் தன்மையில் அவருக்கு நம்பிக்கை இல்லையென்றுதானாகும். இதுவரையில் கையாளப்பட்ட முறைகள் வெற்றி தராததற்குக் காரணம் அதற்காகப் பாடுபட்டவர்கள் உண்மையுள்ளத்துடனும், உறுதியுடனும் பாடுபடாததேயாகும். தம்மிடம் உள்ள இந்தக் குறையை அவர்கள் உணர்ந்துவிட்டார்கள் என்பதல்ல. குறிப்பிட்ட ரசாயணக் கலவையைப் பெறுவது அதற்கான எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்றினால் அல்லது சாத்தியமில்லாமலிருப்பதைப் போல அமைதி அல்லது சமாதானத்தையும் அதற்குள்ள நிபந்தனைகளில் சிலவற்றை மட்டும் நிறைவேற்றினால் பெற முடியாது. நாசகாரக் கருவிகள், சாதனங்கள் ஆகியவற்றைத் தம்மிடம் வைத்திருக்கும் உலக மக்கள் ஒப்பும் தலைவர்கள் அந்தச் சாதனங்கள் முழுவதையும், அதனால் விளையக்கூடிய நன்மை தீமைகளையும் நன்கு தெரிந்து கொண்டு துறக்கச் சித்தமானாலல்லது உலகில் சாசுவதமான சமாதானம் ஏற்படுத்துவது சாத்தியமல்ல. இது உலகின் பெரிய நாடுகள் தமது ஏகாதிபத்திய

நோக்கங்களை விட்டொழித்தாலல்லது சிறிதும் நடக்கக் கூடியதல்ல. மேலும், இந்த பெரிய நாடுகள் ஆன்மாவை அழிக்கும் போட்டா போட்டியில் தமக்குள்ள நம்பிக்கையையும், தம் தேவைகளைப் பெருக்கிக் கொள்வதில் உள்ள, எனவே தமது உடமைகளை அதிகரிப்பதிலுள்ள விருப்பத்தையும் விடச் சம்மதித்தாலல்லது இது சாத்தியமல்ல. - ஹரிஜன், 16.5.1936, பக்கம் 10

மனித சமுதாயம் போரின் கொடிய விளைவுகளைக்கண்டு திகில் அடைந்து பின் வாங்கினால் எதுவும் கெட்டுப் போய் விட்டதாகாது. லட்சியம் உயர்ந்ததாகவோ, தாழ்ந்ததாகவோ இருப்பினும் அதன் பொருட்டு இப்போது உலக மக்கள் எல்லோரும் தம் உடலில் ஒரு சொட்டு ரத்தம் கூட இல்லாமல் சிந்தச் சோர்ந்து போய் விட்டார்களே, இதிலிருந்து பிறர் ரத்தத்தைச் சிந்தாமல் தம் ரத்தத்தைத் தயங்காது சிந்துவது மிகவும் சிறந்தது என்பதைத் தெரிந்து கொண்டார்களானால் அவர்கள் செய்தது வீண் என்று ஆகாது ... இந்தியா தானும் ஒரு ராணுவ பலம் கொண்ட நாடாக விரும்பிச் செய்யும் முயற்சியில் அடுத்த சில ஆண்டுகளுக்காவது உலகைப் பற்றிக் கொண்டிருக்கும் சோர்வைப் போக்குவதற்கு வழி சொல்லத் தெரியாத ஐந்தாந்தர நாடாக இருக்கப் போகிறதா, அல்லது தனது அஹிம்சைக் கொள்கையை மேலும் திருத்தியும் தொடர்ந்தும் பின்பற்றி நடந்து தான் வெகு பாடுபட்டுப் பெற்ற சுதந்திரத்தை, கடந்த போரில் உலகம் பெற்றதாகச் சொல்லப்படும் வெற்றி ஒருபுறமிருந்தும், அதை அமுக்கிக் கொண்டிருக்கும் பெருஞ் சுமையிலிருந்து விடுவிக்கப் பயன்படுத்தப் போகிறதா என்பதை முடிவு செய்தாக வேண்டும். - ஹரிஜன், 5.5.1946, பக்கம் 116

ஒரு ஜனநாயக வாதி தனது நாட்டின் எவ்வளவு ஆன்ம பலத்தை உலகின் உபயோகத்திற்குத் தந்துதவலாம் என்று எண்ணுவானே தவிர, தன் நாடு சேர்த்துக் குவித்திருக்கும் ஆயுதங்களை உலகின் முன் பெருமையாகக் காட்ட எண்ணமாட்டான். இந்தியா செய்யும் முயற்சியின் விளைவாக அத்தகைய சுதந்திரமான உலக நாடுகளின் கூட்டமைப்பை உருவாக்க முடியுமானால் கடவுளின் ராஜ்யம் அல்லது ராமராஜ்யம் விரைவில் அமையும் என்ற நம்பிக்கையை நியாயமாகக் கொள்ள இடமுண்டு. - ஹரிஜன், 13.7.1947, பக்கம் 23

இந்த உலகம் ஒரே உலகமாக ஆகாவிட்டால் இதில் வாழவே நான் விரும்பமாட்டேன். - "மகாத்மா காந்தி-இறுதிப்பகுதி", 2-ம் புத்தகம் (ஆங்கிலம்), பக்கம் 9

## 25. நாளைய உலகம்

இன்றுபோல் என்றுமே வருங்காலம் எப்படியிருக்கும் என்பது பற்றிய யூகங்களும் கற்பனைகளும் இவ்வளவு தோன்றியதேயில்லை. உலகம் என்றுமே

ஹிம்சை மயமாகத்தானிருக்குமா? உலகில் எப்பொழுதும் ஏழைமையும் பட்டினியும் துயரமும் தானிருந்து வருமா? நாம் சமயத்தினிடம் இன்னும் அதிக உறுதி வாய்ந்ததும் பரந்ததுமான நம்பிக்கை பெறுவோமா அல்லது உலகமே கடவுளற்றதாக ஆகிவிடுமா? சமுதாயத்தில் பெரிய மாறுதல் ஏதோ வரப்போகிறதென்றால் அந்த மாறுதல் எந்த வழியில் வரும் - போரினாலா, புரட்சியினாலா அல்லது அமைதியான முறையிலா?

ஒவ்வொருவரும் தமக்குத் தோன்றும் விதத்திலும் தாம் விரும்பும் வகையிலும் நாளைய உலகின் சித்திரத்தை வரைந்துகொண்டு மேலே குறித்த கேள்விகளுக்கு வெவ்வேறு வகையில் விடையளிக்கிறார்கள். நான் அளிக்கும் விடை வெறும் நம்பிக்கையின் பயனாகத்தோன்றியதல்ல, எனது அசைக்க முடியாத உறுதியின் விளைவாகும். நாளைய உலகம் அஹிம்சையின் அடிப்படையில் அமைந்த சமுதாயமாக இருக்கும்; அவ்வாறு தான் இருக்க முடியும். இது முதல் விதி. இதிலிருந்து மற்ற எல்லா நன்மைகளும் தோன்றும். நான் சொல்லும் இது விரைவில் நடக்கக் கூடாததாகவும், காரிய சாத்தியமில்லாத கனவாகவும் தோன்றலாம். ஆனால் அதை இன்றே, இப்பொழுதே உருவாக்கிவிட முடியுமாகையால் எவ்வகையிலும் அசாத்தியமானதென்று சொல்வதற்கில்லை. எந்தத் தனி மனிதனும் பிறர் எவருக்காகவும் காத்திராமல் நாளைய உலகின் போக்கை தன் விஷயத்தில் இன்றே கடைப்பிடிக்க ஆரம்பித்துவிடலாம். ஒரு மனிதனால் செய்ய முடியுமென்றால் பலர் சேர்ந்தமைந்த குழுக்களினால் முடியாதா, நாடுகள் முழுவதினாலும் தான் முடியாதா? தாம் நினைக்கும் காரியம் முழுவதையும் நிறைவேற்ற முடியாது என்ற எண்ணத்தில் பலர் காரியம் தொடங்கவே தயங்குகிறார்கள். நமது முன்னேற்றத்திற்கு பெருந்தடையாயிருப்பது இந்த மனப்போக்குதான். இந்தத் தடையை ஒவ்வொருவரும் மனம் வைத்தால் நீக்கி விடலாம்.

என் கருத்துப்படி நாளைய உலகின் இரண்டாவது நியமம், சமப்பங்கீடாகும். இது அஹிம்சையினின்று தோன்றுவது. இதற்கு உலகிலுள்ள பண்டங்கள் உலக மாந்தரிடையே மனம் போன போக்கில் பிரித்து அளிக்கப்படுமென்று அர்த்தமில்லை; ஒவ்வொருவருக்கும் தேவையான பொருள்களைப் பெற உதவும் சாதனங்கள் மட்டும் அளிக்கப்படும், அதற்கதிகமாகத் தரப்படாது என்று அர்த்தம். நாட்டுப்புறத்தானுக்குப் புரியும் ஓர் உதாரணத்தின் மூலம் இதைத் தெளிவாக்குவதென்றால் ஒரு மனிதனுக்கு ஒரு வாரத்திற்கு கால் ராத்தல் கோதுமை மாவு போதும்; இன்னொருவனுக்கு 5 ராத்தல் மாவு தேவைப்படுகிறது என்னும்போது இருவருக்குமே கால் ராத்தல் மாவோ, அல்லது 5 ராத்தல் மாவோ அளித்தல் சரியாகாது. இருவருக்குமே அவரவருக்குத்

தேவையான மாவே அளிக்கவேண்டும்.

இந்த இடத்தில் நாளைய உலகை உருவாக்கவிருக்கும் முக்கியமான பிரச்சினைக்கு நாம் வருகிறோம் எனலாம். இந்த சமப் பங்கீட்டைச் செய்வது எப்படி? தனவந்தர்களின் உடமைகள் முழுவதையும் பறித்து எல்லோருக்கும் பகிர்ந்தளிப்பதா?

இந்தக் கேள்விக்கு அஹிம்சை, 'அவ்வாறு செய்யக் கூடாது' என்று பதிலளிக்கிறது. பலாத்காரமான எதனாலும் மனித சாதிக்கு சாசுவதமான நன்மை எதுவும் விளையாது. பலவந்தமாகப் பறிக்கையில் சமுதாயம் பல பெரிய நலன்களை இழந்துவிடும். பணக்காரனுக்கு ஒன்றை உற்பத்தி செய்யவும் பெருக்கவும் தெரியுமாகையால் அவனது திறமையை இழப்பதற்கில்லை. இதற்குப் பதிலாக அவன் சொத்தையும் உடமைகளையும் அவனிடமே விட்டுவிட்டு, அவனை தன் நியாயமான தேவைகளுக்குப் போக எஞ்சியவற்றிற்கு தர்மகர்த்தாவாக இருந்துகொண்டு, சமூகத்தின் நலனுக்காக அவைகளைச் செலவிடும்படி விட்டு விடவேண்டும். இத்தகைய மனிதர்கள் இதற்கு முன் இருந்திருக்கிறார்கள். இன்றும் இருக்கிறார்கள். ஒரு மனிதன் தன்னை சமுதாயத்தின் தொண்டனாகக் கருதி அதன் பொருட்டே பொருள் தேடுவதும் செலவழிப்பதுமாயிருக்கையில் அவன் சேர்க்கும் பொருள் நல்லதாகவும், அவன் செய்யும் தொழில் ஆக்கம் அளிப்பதாகவும் ஆகி விடுகிறது என்பது என் எண்ணம்.

ஆனால் இந்த அஹிம்சைக் கருத்து முழுவதுமே மனித சுபாவம் மாறினாலல்லது காரிய சாத்தியமாகாது அல்லவா? மனித வரலாற்றில் இவ்வாறு என்றேனும் மாற்றம் நிகழ்ந்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறதா? நிச்சயமாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. எத்தனையோ மனிதர்கள் முதலில் மிகவும் இழிந்தவர்களாய், சுய நலமுள்ளவர்களாய், தனக்காகப் பணம் சேர்ப்பதிலேயே குறியாய் இருந்தவர்கள் பிறகு சமூகம் முழுவதையும் தம் குடும்பமாகக் கருதி அதற்காகவே பாடுபடுபவர்களாய் மாறியிருக்கிறார்கள். ஒரு மனிதன் இவ்வாறு மாறக் கூடுமானால் இதே மாற்றம் பலரிடமும் நிகழலாமே.

நாளைய உலகத்தில் ஏழைமை இராது; போர்கள் நிகழா; புரட்சிகள் தேவைப்படா. எனவே ரத்தக் களறிகளுக்கும் இடமிராது. அந்த உலகத்தில் இது வரையில் இல்லாத அளவு எல்லோருக்கும் கடவுளிடம் மிகவும் அதிகமான, ஆழ்ந்த நம்பிக்கையிருக்கும். உலகம் நிலைத்திருப்பதே, அதன் பரந்த பொருளில், சமயத்தின் மீதுதான். அதைக் களைந்தெறியும் எல்லா முயற்சிகளும் தோல்வியுறும்.

"சுதந்திரம்" - ஆங்கிலப் பத்திரிகையில் வெளியானதின் சுருக்கம்.

# காந்திய சிந்தனைத் தேர்வுக்குரிய நூல்கள்

## சான்றிதழ் தேர்வு

| | | |
|---|---|---|
| சத்திய சோதனை | - | மகாத்மா காந்தி |
| காந்திஜி | - | டாக்டர். மா.பாதமுத்து |
| காந்தி யுகம் | - | டாக்டர். மா.பா.குருசாமி |
| சர்வோதயம் | - | " " |
| அஹிம்சை | - | டாக்டர். அப்துல் ரஸாக் |
| காந்திக்கு முந்திய புரட்சிகள் | - | மகரிஷி. க.அருணாசலம் |

## டிப்ளமோ தேர்வு

| | | |
|---|---|---|
| காந்தி வழிச் சமயம் | - | தி.சேஷாத்திரி |
| பதினொரு மகாவிரதங்கள் | - | மகாத்மா காந்தி |
| சத்தியமே கடவுள் (ரகுபதி ராகவ) | - | மகாத்மா காந்தி |
| பெண்களுக்கு | - | மகாத்மா காந்தி |
| உலக அமைதிக்கு அகிம்சை வழி | - | மகாத்மா காந்தி |
| வகுப்பு ஒற்றுமை | - | மகாத்மா காந்தி |
| சமூகத்தில் பெண்கள் | - | மகாத்மா காந்தி |
| நிர்மாண திட்டம் | - | மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - | மகாத்மா காந்தி |
| ஜனநாயகம் உண்மையும் போலியும் | - | மகாத்மா காந்தி |
| இந்திய சுயராஜ்யம் | - | மகாத்மா காந்தி |
| காந்தி வழி வாழ்க்கை | - | டாக்டர்.ஜே.ஸி.குமரப்பா |
| உழைப்பு | - | " " |
| காந்தி வழி ஓர் அறிமுகம் | - | க.ரா.கந்தசாமி |
| கோட்பாடுகளில் காந்தியம் | - | டாக்டர்.முத்துலட்சுமி |
| | - | டாக்டர்.ஆண்டியப்பன் |
| காந்திய சிந்தனைகள் | - | டாக்டர்.மா.பா.குருசாமி |
| காந்தி வழி கல்வியும் சமூகமும் | - | டாக்டர்.மா.பாதமுத்து |

---


கிடைக்குமிடம் :-

**காந்திய இலக்கிய சங்கம்**

காந்தி மியூஸியம், மதுரை - 625 020.